**Poojah-Number.**

அற்பிசிமூ 4உ ஸாஸ்வதிபூஜை; 5உ விஜயதசமி; 10உ அன்னபிஷேகம்; 23உ தீபாவளிஸ்நானம்.



*"Give me not O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is;
but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*
*"Seek Truth wherever you can find it." But,*
*"Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH**

"HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE."




அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்ஸத்] [God is Love: Knowledge is Power: *Aum*

ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.**

புத்தகம். 20.] 1912வ௵ நவம்பர்௴, பரிதாபிவ௵ கார்த்திகை௴ [சஞ்சிகை. 8.

## NOTICE.

The Editor of the *Viveckachintamani* while thanking his contributors for their valuable contributions, would like to draw the attention of the public to the fact that in pursuance of the uniform policy of this journal, articles could be received only on the understanding that the entire copy right in the articles should be vested solely in the Editor. It would not have become necessary to mention this matter now but for the fact that literary pilfering is becoming more and more prevalent in the journalistic world; and the intentions of the contributors who have by their free gift of the manuscripts helped to further the objects of the Diffusion of Knowledge Agency which the Editor has been maintaining and working for the public good under great difficulties and trials for the past twenty-five years, are being sought to be frustrated by unscrupulous persons.

C. V. Swaminathaiyar, Editor, & Founder V. C.

Lalita Publishing Co., Sole Agents and Managers 19. Adam St. Mylapore, S.

S. Subrahmanieu, Joint Hon. Secretary, Vivekachintamani Rev: Committee.

"To sell the mind for money is a greater sin than to sell the body."

1. அறிவைப்பரவச்செய்வதற்கான நம் விவேகசிந்தா
மணிக்கு வியாச, விஷய தானம் செய்வோர் யாவரே
யாயினும் உண்மையான அந்தர்த்தியானத்தோடு
பூர்ணமதஸம்மதமாய் விஷயார்ப்பணஞ் செய்யல்
வேண்டும். தானம் செய்தபின் தத்தாபஹாரம் செய்
யக்கூடாது. தத்தாபஹாரசிந்தையினர்க்கு விவேகசிந்
தாமணி சங்கப்பலகைபோலிடங்கொடாதொடுங்கும்.

2. உழைக்கும்வழி யுணராது பிழைக்கவழி தேடும்
சில தப்பிலிகள் நம்மை மோசஞ்செய்யாதபடி விவேக
சிந்தாமணியிலுள்ள சுதந்திரமெல்லாமெமக்கேயுரிமை
யாமென்று சட்டப்படி ஆதிமுதற்கொண்டே ஸர்க்
கார் கெஜட்டில் தாக்கல் செய்யப்பெற்றிருக்கிறது

3. விவேகசிந்தாமணியில்வரும் விஷயங்களையாவது
அவைசம்பந்தமான ஸாதன ஸம்யம விவேகவிளக்கப்
பேர்களையாவது தர்மவிரோதமாய்ப்பிரயோகித்துக் கர்ம
விக்னம் செய்வோர் பிழைக்கவழிதெரியாப் புல்லியர்
புகும் பாழ்நரகிற்புக்கார் கதியாவர்: அடாஅது செய்
தவர் படாஅது படுவர்: இகபர மிரண்டிலு மிது ஸத்
தியம் ஸத்தியம், பலிக்குமென்றே திருஞன் பழனி
யாண்டவன். வேலுமயிலுந்துணை. ஆண்டானடிமை




## "THE ORIGIN OF LIFE."

### "Evolution of the Soul."

——:o:——

(By the Orphaned Child of Humanity.)

"The balloon which the President of the British Association loosed on Wednesday is to be floated higher on the breeze of a joint discussion between the chemists and biologists assembled at Dundee."—*Daily Mail.*

"Life, one may say, is a great fluke, which we may suppose from the odds occurs just now and again. The life produced in this way is only a bit of "collodial slime"—that is a spongy or gelatenous mass with some living function."—*Professor Schafer's paper read before the British Association* at Dundee.

"What is it that tranmits electricity into auroras and sunlight into rainbows, and soft flakes of snow into stars, and adament into crystals, and makes solar systems of nebulæ? Whatever it is I am its cousin german. I, too, have my ideas to work out and the universe given me for raw material. I am a signet, and I will put my stamp on the molten stuff before it hardens. The world must come my way, slowly if it will—but still my way. I am a vortex launched into chaos to work it into shape."—*Ernest Crosby.*

"The Law of Nature is: Do the thing and you shall have the *Power*; but they who DO NOT the thing have not the *Power*."—*Emerson.*

——:(o):——

### குஹப்ரஹ்மம் தத்ஸத்·

### சக்திமான்—சக்தி. II

(அநாதைப்பிள்ளை யோலம்.)

——:*:——

சென்ற சஞ்சிகையில் சக்திமான், சக்தியிவை யிரண்டுக்கு முள்ள அபேதத்தையும், சக்தி பேதங்களால் உண்டாகும் ஏகமான சக்திமானின் அனேகமான மூர்த்தங்களையும் பற்றிப் பொதுவாய்ச்சொன்னோம் X-rays, or N-rays Alpha-rays, Beta-rays என்றுசொல்வதற்கு பதிலாக பூர்வந்தொட்டு வழங்கிவரும் சக்தி நாமங்களை யுபயோகித்தோம். இப்பொழுது சக்தி பேதங்களைப் பற்றிச் சற்று விரிவாய்ச் சொல்லப் புகுவோம்.

முதலில் ஏகமாயுள்ள சக்தியொன்றே பரை, பராபரை, அபரையென மூன்றாகப் பிரிந்தது என்று சொன்னோம்.

பிறகு இவற்றின் உட்பிரிவுகளைச் சொன்னோம்.

I. அபரை யென்னும் சக்தி பிராமி, வைஷ்ணவி, ரௌத்ரி யென்னும் மூன்றாகவும்,

II. பராபரை யென்னும் சக்தி இச்சா சக்தி, ஞான சக்தி, கிரியா சக்தி, ஆதி சக்தி ரூபசக்தி,) யென நான்காகவும்,

III. பரை யென்னும் சக்தி இரச்தை, சுக்கிலை, அசிதை, சிருஷ்டினை, உன்மனை யென ஐந்து வகையாகவும் பிரிவதைக் காட்டினோம்.

முதலது அதன் உட்பிரிவுகளோடு சேர்ந்து 4-ஆகவும், இரண்டாவது அதன் உட்பிரிவுகளோடு சேர்ந்து 5-ஆகவும், மூன்றாவது அதன் உட்பிரிவுகளோடு சேர்ந்து 6-ஆகவும் விரியும். ரையினல் கர்த்துருத்துவமும், பராபரையினல் போக்த்ருத்துவமும், பரையினல் அதிகாரத்துவமும் சக்திமானுக்கு உண்டாகின்றது:

கர்த்தா காரியத்தில் லயமாகிறன்.

போக்தா போக்கியத்தில் போகமாகிறன்.

அதிகாரி ஆஞ்ஞையில் அதிஷ்டானம் ஆகிறன்.

(அதிஷ்டானம் என்றல் அதிஷ்டிக்கப்பட்ட பொருளில் அதற்குத் தெரியாம லிருக்கிறது. ஒன்றில் பிரவேசித்துத் தெரியும்படி தோற்றுகிறதற்கு ஆவேசம் என்று சொல்லுகிறது.)

இப்படியாக ஆதிமுதற்பொருளாகிய சக்திமான் ஒருவன் தானே காரண காரிய உபாதனமாகி, காரணத்தில் பூரண அதிகாரியாகவும், காரியத்தில் லயமாகவும், உபாதனத்தில் அதிஷ்டானமாகவும் இருக்கப் பஞ்ச தன்மாத்திரைகளும், பஞ்சீகரணவிதியால் அவற்றிலிருந்து கருவிகாணுதி பூதங்களும் உண்டாயின. பிரபஞ்சத்திலுள்ள சேதனுசேதனப் பொருள்களெல்லாம் இவற்றின் சேர்க்கையா லுண்டானவையே.

காரணத்தின் உபாதனம் மாயை. இது சுத்தம் அசுத்தமென இருவகைப்படும். சுத்தமாயை ஆணவமலத்தைப் போக்கி அத்விதானுபவம் சித்திக்கச்செய்யும். அசுத்தமாயை அறிவைமயக்கி பேதத்தைத்தரும். கர்மத்தில் பிரவேசிக்கச் செய்யும். அசுத்தமாயை பிரவிருத்திவழிகாட்டி ஸம்ஸார பந்தத்திற் சிக்குவிக்கும். சுத்தமாயை நிவிருத்திவழிகாட்டி நிஷ்டை சமாதியினுல் அத்விதானந்த அனுபவத்தை யளிக்கும்.

பராசக்தியின் வேறுபாட்டால் தோன்றும் இச்சை முதலாயசக்திகளின் வேறுபாட்டைச் சொன்னோம். இவை மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு, எட்டு, பதின்மூன்று, ஐம்பத்தொன்று, அநந்தம் ஆகிய கூறுபாடுள்ளன.

அவாந்தர வேறுபாட்டால் (மாயை மயக்கால்) வரும் சக்திபேதங்கள் பலவுண்டு. அவற்றில்,—

| | |
|---|---|
| 1. மஹாமாயை, | 2. உன்மனீ, |
| 3. சமனீ, | 4. வியாபினி, |
| 5. வியோமரூபை, | 6. அநந்தை, |
| 7. அநாதை, | 8. அநாசிருதை, |
| 9. சூக்குமை, | 10. அதிசூக்குமை. |
| 11. அமிர்தை, | 12. அமிர்தாமிர்தை, |
| 13. வியாபினி, | 14. இந்திகை, |
| 15. தீபிகை, | 16. உரோசிகை, |
| 17. மோசிகை, | 18. ஊர்த்துவகை, |
| 19. நிவிர்த்தி | 20. பிரதிட்டை, |
| 21. வித்யை, | 22. சாந்தி, |
| 23. சாந்தியதீதை, | 24. சசினி, |
| 25. அங்கதை, | 26. இஷ்டை, |
| 27. மரீசி, | 28. சுவாலினி, |
| 29. தமை, | 30. மோகை, |
| 31. இரக்ஷை, | 32. ரிட்டை, |
| 33. மிருத்தியு, | 34. அபமை, |
| 35. இரசை, | 36. இரதி, |
| 37. பால்யை (வாலை), | 38. கிராமை, |
| 39. ஸம்பியமை, | 40. கார்யை, |
| 41. தாத்திரி, | 42. பவை, |
| 43. மேதை, | 44. காந்தி, |
| 45. சுவதி, | 46. திருதி, |
| 47. மனோன்மணி, | 48. உமை, |
| 49. திரு, | 50. வாணி, |

என்னும் சக்திபேதங்களுக்கெல்லாம் தலைவர் குஹனேயாவர்.

இவையன்றி,—

| | |
|---|---|
| 1. வாமை, | 2. ஜியேஷ்டை, |
| 3. இரௌத்திரி, | 4. காளி, |
| 5. கலவிகரணி, | 6. பலவிகரணி, |
| 7. பலப்பிரமதமனி, | 8. ஸர்வபூததமனி, |

என்னும் எட்டுச் சக்திகளுக்கும் அதிபர் குமரக்கடவுளே யென்பது அவரது அறுமுகங்களாலும் இருதிருவடிகளாலும் உணரப்படும்.

இனி அவர் வேலாயுதனுயிருப்பதைப்பற்றிச் சொல்வோம்:—

**The Immanent God and Intuitive Knowledge.**

**ஞானசத்திதரமூர்த்தி.**

உலகெலா முணர்ந்தோதற் கரியவனுகிய கடவுளை முதலில் தஹராகாசத்தில் கண்டு அங்கே திருச்சிற்றம்பலம் எனும் திருக்கோயில் கட்டி அதில் நித்தியமாயிருக்கும் அவரைப் பிரத்தியக்ஷமாகக்கண்டு பூஜிப்போருக்கு அவரு

டன் அபேதமாக விளங்கும் தடைப்படாத அறிவே (Intuitive Knowledge) ஞானசக்தியாயிருந்துதவும். (Knowledge is Power) என்றதனால் "அறிவே சக்தி" யென்பது பெறப்பட்டது. இது பேரறிவென்றும் பராசக்தியென்றும் சொல்லப்படும். இப்பராசக்தியாகிய பேரறிவு தானே,—

1. இச்சாச்க்தி (Rational Knowledge),
2. ஞானசக்தி (Intuitive Knowledge),
3. கிரியாசக்தி (Instinctive Knowledge),

என்று மூவகைப்பட்டு விரிந்து நிற்கும்.

இம்மூன்று சக்தியையும் உடையவர் எம்பெருமான் குமரக்கடவுள். இச்சாசக்தி (Infinite Reason) அவருடன் இணைபிரியாதிருக்கும். இந்தச் சக்திதான் வள்ளியம்மையார். இவர் குறப்பெண். திருட்டுச் சுபாவமுடைய குலத்திற் பிறந்தவராயினும் குறவஞ்சியென்னும் கூத்தில் தேர்ந்தவர். Intellectual Reason என்னும் இச்சாசக்தியும் அப்படியே திருட்டுச் சுபாவமுடையது. நியாயவாதம் எப்படி வேண்டுமானாலும் செய்ய வல்லது. ஆயினும் நீதிபோதம் என்னும் அழகிய சன்மார்க்கக் கூத்துச் செய்யத் தக்கது.

கிரியாசக்தி (Instinctive Action) பின்னசக்தியாம்—பிரிதலையுடையது. இந்தச் சக்திதான் தெய்வயானையம்மையார். இவர் தேவேந்திரன்மகள். சித்த சுத்தியால் பிரகாசம்பெற்ற (திவ்யத்தன்மைபெற்ற) இந்திரியக் கூட்டங்களுக்கு மூலமான (இராஜாவான) தேஜோ மனவின் (தேவந்திரனின்) புத்ரி. தேஜோமனவின் புத்ரி, பிராணசக்தியே. இது ரேசக பூரக கும்பகமெனும் வேற்றுமையுடையதாய் கேவலகும்பகாவஸ்தையில் மனதில்லயிக்கும்தன்மையுடையது. மனோலயமான விடத்தில் விஷ்ணுசக்தி விளங்கும். ஜீவ்பதசையில் Law of Action, Reaction & Pause எனும் கிரியாசக்தியை அதிஷ்டானித்திருப்பள் இந்த தெய்வயானையம்மையார். இவரது அறிசக்தியை "Instinctive Knowledge" என்று சொல்லுவர் மேற்றிசை வழக்கில்.

ஞானசக்தி யென்பதுதான் (Intuitive Knowledge) என்று மேற்றிசையார் வழங்குவது. இது உளவறிவாய் நிற்கும் தன்மையது. எதையும் தன்மயமாக்கும் ஆத்மசக்தியுடையது. இதையே வேலாயுதம் என்பர். இதற்கு சக்தியாயுதம் என்று பேர். மில்டன் Paradise Lost எழுதியதிலும் இந்த வேலையே தேவதூதர்கள் ஆயுதமாகச் சொல்லியிருக்கிறார். மும்மலமுள்ள ஆத்மாக்கள் எதையும் ஸ்பரிசமாத்திரத்தால் மலத்தைப் போக்கி அறிவுமயமாக்கத்தக்கது. இதை வெல்லுஞ் சக்தி வேறில்லையால் இதையே எல்லாவற்றிற்கும் மேலான சக்தியாக ஆகமபுராணாதி சுத்தவித்தைகள் புகலாநிற்கும்.

சிவபெருமான் சூரபன்மன், சிங்கமுகன், தாரகன் என்னும் மூவர்க்கும் (ஆணவம், மாயை, கன்மம் என்னும் மும்மலத்தின் பிரதிஷ்டா நாமவடிவங்கள்) கேட்ட வரங்களையெல்லாம் கொடுத்துவிட்டுக் கடைசியில் அவர்களை நோக்கி "எம்முடைய சக்தியே நம்மைக் கொல்லும்" என்று சொன்னாராகையாலும், அப்படியே குமரக்கடவுள் இந்த வேற்படையின் சக்தியால் மேற்சொன்ன மூவரையும் ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம் எனும் வினைப்பகுதியென்றெண்ணத்தகுந்த கிரவுஞ்சமலையையும் அதன் கொடுவினைகளையும் அழித்தலமையாலும், மற்றைய ஆயுதங்கட்கெல்லாம் வழங்கப்படாத சக்தி என்னும் சிறப்புப்பேர் இதற்கே யுடைமையாலும் இதன் மஹிமை அளவிறந்தது. இது குமரக்கடவுளின் மூன்றும் சக்தியாகவிருந்து அவரோடு இணைபிரியாதிருக்கும். இது ஆயுதங்கள் எல்லாவற்றிலும் சிறந்தது. இதை வெல்லத்தக்க படை வேறில்லை. (Intuitive Knowledge) என்னும் சகஜ

ஞானத்துக்கு மிஞ்சியது வேறில்லை. சகஜஞானம் என்றால் கூடப்பிறந்த ஞானம்; குமாரக்கடவுளோடு கூடப்பிறந்தது இந்த சகஜஞானம். பிரகாசத்தினின்றும் சுடர் உண்டானதுபோல் ஸர்வ வியாபகமாயுள்ள ப்ரஹ்மஞானத்திலிருந்து இந்த சகஜஞானம் உண்டாயிற்று. ஆதலால்தான் குமாரக்கடவுளோடு கூடப்பிறந்ததாயிற்று. தஹராலயத்தில் குஹனடி தொழுதிருப்பாரெல்லாருக்கும் இந்த ஸகஜஞானமும், பிரவிருத்தி ஞானமாகிய மாயாசம்பந்தப்பட்ட தத்துவஞானமும் துணைக்கருவியாயிருந்து காக்கும். ஆதலால்தான் "வேலுமயிலுந் துணை யென்றாற்குக் கோலும் குடையும் பிணையில்லை" என்ற ஆன்றோர்வாக்கு உதித்தது. சகஜஞானமும் தத்துவஞானமும் துணைநிற்கும் தூயவர்க்கு அரசனது துஷ்டநிக்ர சிஷ்டபரிபாலன சின்னங்களாகிய கோலும் குடையும் அத்தூயவரது துணைக்கருவிகளாகிய வேலுக்கும் மயிலுக்கும் ஒப்பாகாது.

"வேலுமயிலுந் துணையென்றே நான்
நாலும் ஆறும் அறக்கற்றேன்!
வேலுமயிலுந் துணையென்றேற்குக்
கோலுங்குடையும் பிணையாமோ!"

என்ற பெரியவர் வாக்குக்கு அர்த்தம் இப்பொழுதுதான் தெரிந்தது. "சகஜஞானமும் தத்துவஞானமும் துணையென்றே நம்பி அஹம்பாவத்தை, நாலுவேதங்களும் ஆறுசாஸ்திரங்களும் ஓதுமளவுகண்டு, அற(அந்த பாவனை வேதங்களொடுங்கிய மோனத்தில் அற்றுப்போக) அப்பியாஸ யோகத்திலிருந்தும் ஞானசமாதி பழகியும் வித்வத்லக்ஷிய முணர்ந்து தேறினேன். அப்படித்தேறின தேற்றத்தில் "வேலுமயிலுந் துணையென்றே" அஹம்பாவ மழிய நின்றேற்கு அரசனது கோலும் குடையும் (ஆஜ்ஞையும், பாதுகாப்பும்) நித்தியானந்த நிர்மலாகாரமாயிருந்து [illegible]னந்த சாந்தியவதூத சாக்ஷி மாத்ரமாய்க் [illegible]க்ஷைபெற்றிருத்தற்குப் பிணையாமோ! இறைப்பு சேர்ந்தார்க்கு அரையன் ஆஜ்ஞையும் பாதுகாப்பும் ஒரு பொருட்டல்லவென்றபடி. இது பெரியோரனுபவம்.

"அந்தமி லொளியின் சீரா லறுமுகம் படைத்த பண்பால்
எந்தைகண் நின்றும்வந்த இயற்கையாற் சத்தியாம் பேர்
தந்திடும் பனுவல் பெற்ற தன்மையாற் தனிவேற் பெம்மான்
கந்தனே யென்ன நின்னைக் கண்டுளக்கவலை தீர்ந்தோம்."

மற்ற ஆயுதங்களைப்போல் ஜடத்துவமன்றி சித்விலாஸம் நிறைந்திருத்தலால் இந்த வேலையே பராசக்தியாகவும் மற்ற தோமரம், துவஜம் குலிசம், அங்குசம், அம்பு, பங்கஜம், மணி மழு, தண்டு, வாள், வில், என்னும் பதினொரு ஆயுதங்களும் பதினொரு உருத்திரர்களே யென்றும், இன்னும் பராசக்தி அபேதமென்னலால் பரம் பரனே என்று கருதப்படுதல் போல இந்த வேற்படைக்கலமும் கந்தசுவாமியே யென்று அபேதமாய்க் கூறப்பெறும்.

இந்தச் சக்தியாயுதம் வேறொரு படையானுந்தான் அழிக்கப் படாமையாலும், தானொன்றே பற்பல உருவங்கொண்டு வென்றமையாலும், இதுவே ஆன்மாவை பந்தப்படுத்தும் பாசங்களை நிக்கிரகிக்க வல்லது ஆகும். இதே பானுகேயன்; சிங்கமுகன் என்பவர்களுடைய மாயாபாசங்களாற் கட்டப்பட்டு வீரவாகு தேவர் முதலாயினோர் மயங்கியபோது அப்பாசக் கட்டுகளை யறுத்தமையானும் கந்தபுராணம் இதன் மஹிமையை யெடுத்தோதிப் பாரக்கக் காட்டும்.

இப்படிப்பட்ட மஹாசிறப்பினதாகிய பராசக்தி யென்னும் ஞானசக்தியைக் கொண்டு ஆன்மாக்களின் மும்மல பாச பந்தங்களை யறுத்துத் தமது திருவடிப்பேற்றை யளித்தருளத் திருவுருவங்கொண்ட பரம ஆரியனாகிய எம்பெருமான் இச்சை, ஞானம், கிரியை யென்னும் இவை மூன்றிலேபோலக் கிளைகொண்டு

பவக்கடலைச் சுவற்றும் ஞானசத்தியாம் வேலாயுதத்தை வலத் திருக்கரத்திற்றரித்து, தாமரைமலர் போலும் இடத்திருக் கரத்தைத் தமது அரையில் வைத்து, பட்டுக்குல்லாத் தரித்து ஆசாரிய மூர்த்தங்கொண்டு ஒரு திருமுகமும் இருவிழிகளுமுடையராய்க் கோடிசூரியப் பிரகாசமொருங்குசேர்ந்தவொளியுள்ளத்தைக்கவரா தேவர்களும் வித்தியாதரர்களும் சூழ்ந்து சேவிப்ப வீற்றிருந்தருளிய கோலங்காட்டி ஜாலம் நீங்க என்னை அடிமை கொண்டருளியதரத்தைச் சுவாமிமலையில் கண்டு மகிழ்ந்தேன். அன்று தோன்றிய ஞானசக்தியாத்மாவாகிய சுவாமிநாதனே இன்று ஸ்ரீ விசுவநாதன் இதயத்திலங்கும் பொன்விலங்கு தரிக்கத் தறித்துநின்ற தங்கவேல் மேனியினுள்ளிருந் ததித்து உண்மையைக் காட்டித் திண்மையைத் தந்து தயாபரனுகத் தஹராலயங் கொண்டருளி நின்ற கோலங் கண்டேன். கண்டவன்தானேகாணத் தனியிருந்தநாதைப்பிள்ளையாய் அன்புகிறைந் தோலமிட்டு 'ஓஓஓஓ' என்றலறி யேழரைமாற் றெலியுக்கிளம்ப வுண்மையைச் சொல்லித் தருமாம்பிகையாம் தாயைப்போற்றி முறையிடு செய்து கொண்டனன். பார்க்கக்கண்ணுள்ளார் பரையேடு கண்டுணர்வீர் !

"சக்திதர ஸ்வாமீ வகாஸ்யத்வி புஜம்
வாமே கடிதகூநிண கேகரே இச்சாஞர்ன
க்ரியாசக்தி ரூபசக்தி தாம்பஜே!—."
—குமாரதந்திரம்.

ஓம்தத்ஸத்.

———:-:———

## The Water of Life.

### ஸர்வாதேவதாப꞉ ஓம் பூர்புவஸ் ஸுவரோம்.

"ஆபோவா இதம் ஸர்வம்" என்கிற மந்திராந்தம்.

———:(o):———

ஒரு காலத்தில் ஒரு அரசனுக்கு மூன்று குமாரர்கள் இருந்தார்கள். அந்த அரசன் தள்ளாத வயதில் மிகவும் வியாதியால் பிடிக்கப்பட்டு பிழைப்பானென்கிற நம்பிக்கை யில்லாமலிருந்தது. வைத்தியர்களும் கைவிரித்தார்கள். ஆனால் அவர்களில் மணிமந்த்ர ஔஷதமென்கிற மூன்றிலுந்தேர்ந்த ஒருவர்மாத்திரம் "தேவதாப꞉" என்கிற தேவஊற்றிலிருந்து தண்ணீர்கொண்டு வந்தால் அரசன் பிழைப்பானென்றார். அரசன் தேவவூற்றிலிருந்து தண்ணீர்கொண்டு வருகிறவர்களே தனக்குப் பிறகு பட்டத்துக்கு வரவேண்டுமென்றான். அதைக் கேட்ட மூத்த குமாரன் தான்போய்க் கொண்டுவருவதாய்ச் சொல்லி தந்தையினிடம் மன்றாடி அனுமதி பெற்றுக்கொண்டு புறப்பட்டுப் போனான். போகும் வழியில் இராஜகுமாரன் ஒருகுள்ளனைக்கண்டான். அந்தக்குள்ளன்(அந்தராத்மா)ராஜகுமாரனைப்பார்த்து"நீ எங்குபோகிறாய்?சொல்! என்னால் கூடுமானால் உனக்கு உதவி செய்கிறேன்" என்றான். ஆனால் அந்தராஜகுமாரன்'கேவலம்'இந்த அற்பப் பயலோடு நாம் பேசுவதா என்று அகம்பாவம் கொண்டு காதில் விழாதவன் போலப் போனான். மறுபடியும் அந்தக்குள்ளன் கூப்பிட்டதனால் ராஜகுமாரன் கோபங்கொண்டு "சீசீ! அற்பநாயே, சும்மாயிரு!' என்று சொல்லிவிட்டுப் போனான். உடனே குள்ளனுக்கு கோபம் வந்தது. அவன் "நீ இரண்டுமலைகளுக்கு நடுவில் போய் முன்னும் பின்னும் அசைய முடியாதவனாய் இருக்கக் கடவது" என்றுசபித்தான். அப்படியே ராஜகுமாரன் இரண்டு மலைகளுக்கு நடுவிலே போய்ச் சேர்ந்ததும், அவனால் முன் செல்லவாவது பின் செல்லவாவது அல்லது திரும்புவதற்காவது சக்தியில்லாம லிருந்தான். அதற்குள் அரசன் தன் மூத்த குமாரன் திரும்பி வராததைப்பற்றி வருத்தப் பட்டான். உடனே இரண்டாவது குமாரன் தான்போய் அந்த தேவவூற்றிலிருந்து தண்ணீரை எடுத்துக்கொண்டு அப்படியே அண்ணனையும் அழைத்துக்கொண்டுவருவதாய்ச் சொல்லி மன்றாடி அனுமதி பெற்றுக்கொண்டு போனான். போகும்வழியில் இவனும் அந்தக் குள்ளனைக்கண்டான். குள்ளன் இவனையும் கண்டு எங்கு

போகிறாய் என்று கேட்க, ராஜகுமாரன் நாமும் 'கேவலம்' இந்த அற்பப்பயலைமதித்துப் பேசுவதாஎன்று எண்ணி, "ஏ! அற்பப்பயலே, சும்மாக்கிட" என்றுதூஷணமாகப்பேசிப்போனான். குள்ளன் உடனே கோபங்கொண்டு "உன் அண்ணனுக்குவந்தகதி உனக்கும் வரட்டும்" என்றான். கடைசியில் இளையராஜகுமாரனும் மூத்தவனிருந்த இடத்திற்கு அருகே போனதும் முன்பின் நகர சக்தியில்லாமலிருந்தான். பிறகு மூன்றாவது குமாரனும் தன்தகப்பனின் விடைபெற்றுக்கொண்டுபுறப்பட்டான். குள்ளன்இவனையும் எங்குபோகிறாய் என்று விசாரித்தான். உடனே கடையவன் குதிரையைவிட்டு இறங்கி குள்ளனிடம்போய் தனக்குத் தேவவூற்று நீர் வேண்டும் என்றும் அதற்காகவே போகிறதாகவும் விநயமாய்ப் பதில் சொன்னான். குள்ளன் மிகவும் சந்தோஷமடைந்து "அது இருக்கும் இடம் உனக்குத்தெரியுமா" என்றான். அதற்குக் *கடையவன், "எனக்குத் தெரியாது: உன்னால் ஏதாவது உதவிசெய்ய முடியுமா" என்றான். குள்ளன்: முடியும்! நீ உன் அண்ணனைப்போல் கர்விபாயிராமல் இருப்பதால் எனக்கு உன்னிடம் சந்தோஷமுண்டாயிருக்கிறது. அந்த ஊற்று சபிக்கப்பட்ட ஒரு அரண்மனையின் தோட்டத்தில் இருக்கிறது. அந்த அரண்மனையின் கதவு மூடப்பட்டிருக்கும். நான் உனக்கு அற்புத கட்டப்பாரை ஒன்று கொடுக்கிறேன்; அதனால் மூன்றுதரம் கதவைத்தட்டு; உடனே அந்தக்கதவு திறந்துகொள்ளும். உள்ளே இரண்டு சிங்கங்கள் காவல்காத்துக்கொண்டிருக்கும். நான் உனக்கு ஒரு ரொட்டித்துண்டு கொடுக்கிறேன். அதை அந்த சிங்கங்களுக்குக் கொடுத்துவிட்டுத் தோட்டத்திற்குப்போய் தேவ ஊற்றிலிருந்து தண்ணீர் எடுத்துக்கொண்டு அங்கிருக்கும் கடியாரத்தில் பன்னிரண்டு அடிக்குமுன் அரண்மனைக்கு வெளியில் வந்துவிடு. இல்லாவிட்டால், அரண்மனைக் கதவு மூடிக்கொள்ளும். பிறகு உன்னை மீட்க யாராலும் முடியாது!—என்றான். ராஜதுமாரன் அப்படியே அந்தக்குள்ளனிடமிருந்து ஒரு அற்புத கட்டப்பாரையையும் ரொட்டியையும் வாங்கிக்கொண்டு அந்த அரண்மனை போய்ச்சேர்ந்தான். அந்தக்கதவை அவன்மந்த்ர கடப்பாரையால் மூன்றுதரம்தட்டினதும் அது திறந்துகொண்டது. உள்ளேபோனதும் இரண்டு சிங்கங்கள் காவல் காத்துக்கொண்டிருந்தன. அவைகளுக்கு ரொட்டியைக் கொடுத்தான். அவைகள் அதைச்சாப்பிட்டுக்கொண்டிருக்கும் பொழுது இவன் உள்ளே நுழைந்தான். ஒரு ஹாலில் ஒரு ராஜகுமாரத்தி தூங்கிக்கொண்டிருந்தாள். அவள் பக்கத்தில் ஒரு கத்தியும் சாப்பிடச் சாப்பிட வளர்ந்துக்கொண்டிருக்கும் ஒரு (அக்ஷய) ரொட்டியும் இருந்தது. ராஜகுமாரன் அவள் கையிலிருந்த மோதிரத்தைக் கழற்றிக்கொண்டு அந்தக்கத்தியையும் ரொட்டியையும் எடுத்துக்கொண்டு அந்த ராஜதுமாரத்தியைத் தட்டி எழுப்பினான். அவள்விழித்துக்கொண்டு தான் ஒருமந்திரவாதியால் இப்படி எப்பொழுதும் தூங்கும்படி சபிக்கப்பட்டதாகவும், இப்பொழுது அவனால் சாபம் நீங்கிவிட்டதெனவும் ஒரு வருஷத்திற்குள் வந்தால் அவன் தன்னை மணஞ்செய்துகொண்டு தனதுராஜ்யத்திற்கும் அரசனாயிருக்கலாமென்று சொன்னாள். ராஜகுமாரன் தான் ஒரு வருஷத்திற்குள் திரும்பிவந்து அவளை மணஞ்செய்துக்கொள்வதாக வாக்களித்துவிட்டு தோட்டத்திற்குப் போய் தேவவூற்றிலிருந்து தண்ணீர் எடுத்துக்கொண்டு புறப்பட்டான். வழியில் ஒரு சோபாவில் களைப்பாயிருந்ததால் கொஞ்சம் நாழிகழித்துப் போகலாமென்று படுத்துக்கொண்டு அயர்ந்து தூங்கிவிட்டான். பிறகு விழித்துக் கொண்டபொழுது கடியாரமானது பன்னிரண்டு அடிக்க ஆரம்பித்து அதில் மூன்று அடித்துவிட்டது. உடனே அவன் அவசர அவசரமாய் ஓடிவாசற்படியைத் தாண்டினான்.

* மூன்றாவதுராஜகுமாரனை ஸாத்விகன்.

தாண்டுவதற்குள் பன்னிரண்டு அடித்துவிட்டதால் கதவு வேகமாய் வந்து அவன்காலில் அடித்தது. தான் பிழைத்தது புனர்ஜன்மமென்று எண்ணிக் குள்ளனிடம் வந்து சேர்ந்தான். குள்ளன் இவனைக்கண்டதும் அவனை நல்வரவு விசாரித்துப் பிறகு அவன் கையில் இருக்கும் கத்தியைப்பார்த்து "என் தலையைத்தவிர மற்றவர்களது" என்று சொன்னால் உடனே அது அவனைத்தவிர மற்றவர்கள் தலையை வெட்டிவிடும் என்று சொன்னான். இப்பொழுது இவன் ஊருக்குப் போகும்பொழுது தன் அண்ணன்களையும் அழைத்துக்கொண்டுபோக விரும்பி அவர்களிருக்குமிடம் தெரியுமா என்று குள்ளனைக்கேட்டான். அவன் அவர்கள் தன்னை தூஷணமாகப் பேசியதால் தன் சாபத்தின் மகிமையினால் இரண்டுமலைகளுக்கு நடுவே அகப்பட்டுக்கொண்டு முன்பின் நகர முடியாமல் இருக்கிறார்களென்றும் ராஜகுமாரன்போய் அவர்களைத் தொட்டதும் அவர்கள் சாபத்தினின்றும் மீட்கப்படுவார்கள் என்றும், அவர்கள் அயோக்கியராதலால் அவர்களிடம் ஜாக்கிரதையாய் இருக்கும்படிக்கும் சொன்னான். அப்படியே கடைசி இராஜகுமாரன் போகும்வழியில் பஞ்சத்தால் பிடிக்கப்பட்ட ஒரு ஊர்வழியாய்ப் போகவேண்டியிருந்தது. அங்கே ஜனங்கள் பசியால் பிடிக்கப்பட்டு வருந்துவதைக்கண்டு தன் கையிலிருந்த ரொட்டித்துண்டை அந்த ஊர் இராஜர்விடம் கொடுத்து அதன் மகிமையைச்சொல்லி அதை ஜனங்களுக்குக் கொடுக்கும்படி சொன்னான். இன்னொரு ஊருக்குப்போனபொழுது அந்த ஊரை ஒரு எதிரி முற்றுகை போட்டுக்கொண்டிருந்தான். இவன் அந்த ஊர் அரசனிடம் சென்று தன் கத்தியால் எதிரியை முறியடித்துவிட்டு தன கத்தியோடு அண்ணன்களிருக்கும் இடம் சென்று அவர்களைக்குள்ளன் சாபத்தினின்றும் மீட்டுக்கொண்டு தன்னூருக்குத் திரும்பினான். வழியில் அண்ணன்களுக்குப் பொறாமை அதிகரித்து ஒருநாள் அவன்கொண்டுவந்ததேவ ஆற்றுத்தண்ணீரை தாங்கள் எடுத்துக்கொண்டு அவன் பாத்திரத்தில் சாமான்ய ஆற்றுநீரை நிரப்பி வைத்தார்கள். ஊர்போய்ச் சேர்ந்ததும் கடைசிப் புத்திரன் தன் அண்ணன்கள் செய்த சூதை அறியாமல் அதைத் தான் தேவவூற்றிலிருந்து கொண்டுவந்த நீர் என்றெண்ணி அதைத் தன் தகப்பனுக்குக் கொடுத்தான். அது சாமானிய நீரானதால் அரசனுக்கு வியாதி அதிகரித்தது. மற்ற இருவர்களும் அவன அரசனைக் கொன்று தான் அரசாக்ஷி பெறுவதற்காக அப்படிச் செய்தான் என்றார்கள். மூன்றாவது புத்திரன் தான் போய்த் தண்ணீர் கொண்டுவந்த அரண்மனையின் அடையாளங்களையும் அங்கிருந்த ராஜபுத்திரி தன்னை ஒரு வருஷத்துக்குள் வந்தால் மணஞ் செய்துகொள்வ தாக்களித்ததையும் மற்ற அற்புதங்களையும் சொல்லியும் நம்பாமல் அரசன் இரகசியமாய் அவனைச் சுட்டுக்கொன்றுவிடவேண்டும் என்று உத்தரவிட்டான். உடனே மற்றைய இரண்டு இராஜகுமாரர்கள் தாங்கள் அவனை மோசஞ்செய்து சம்பாதித்த அந்த தேவவூற்று நீரை அரசனுக்குக் கொடுத்து அவனை சொஸ்தப்படுத்தினார்கள். பிறகு அவர்கள் மூன்றாவதுபுத்திரன் சொன்ன ராஜகுமாரியைத் தாங்கள் மணஞ்செய்துகொள்ளவேண்டும் என்னும் அவா உடையவர்களாய் அந்த அரண்மனைக்குப் புறப்பட்டார்கள்.

இங்கு இப்படி இருக்க, அங்கு ராஜகுமாரி இவனுக்காகக் காத்துக்கொண்டிருந்தாள். அவள் வேறு யாராவது தன்னை ஏமாற்றிவிடக்கூடுமென்று தன் அரண்மனைக்கு வாசலில் இருந்து தன் அரண்மனை வரைக்கும் தங்கத்தால் நடபாதை போட்டு தன் சேவகர்களுக்கு யார் அந்தத் தங்கப்பாதை நடுவிலே நடந்துவருகிறார்களோ அவர்களைமட்டும் அழைத்து வரும்படிச் சொன்னாள். மூத்த ராஜகுமாரன் அங்கு வந்தபொழுது தங்கத்தால் நடபாதைபோட்டிருக்கக்

கண்டு அதை மிதித்து நாசம் செய்யலாகாதென்று ஓரமாய் புல்லடர்ந்த பாதையில் போனான். போனதும் சேவகர்கள் உள்ளே விடமாட்டோமென்று மறுத்தார்கள். பிறகு இளையவனும் அங்குவந்து தங்கநடபாதையைப் பாழாக்கக் கூடாதென்று ஓரமாய்ப் போனான். அவனையும் உள்ளேவிட மறுத்தார்கள். இது இப்படியிருக்க அங்கு கடைசிராஜபுத்திரன் வேட்டையாடப் போனபொழுது அரசனால் அனுப்பப் பட்ட கொலையாளி அங்கு வந்து தனக்கு அவனைக் கொல்லும்படி கட்டளை பிறந்திருக்கிறது என்றான். ராஜகுமாரன் கெஞ்சிக் கேட்டுக்கொள்ளவே கொலையாளி மனமிரங்கி அவனை உயிர் பிழைக்கும்படி விட்டுவிட்டான். அவன் உடனே அந்த ராஜகுமாரியை நினைத்துக்கொண்டு அந்த அரண்மனை போய்ச் சேர்ந்தான். அவன் வழியில் ராஜகுமாரத்தியைப் பற்றியே நினைத்துக்கொண்டிருந்ததால் தங்கநடபாதையைக்கவனியாமல் அதன்மேல் நடுவில் நடந்துபோனான். சேவகர்கள் உள்ளே இவனை அழைத்துக் கொண்டு போனார்கள். ராஜகுமாரத்தி அவனை மணஞ்செய்துகொள்ள அவன் அங்கேயே சுகமாக இருந்தான். அவன் தகப்பனுருக்கு,இவன் ரொட்டித் துண்டையும் கத்தியையும் கொடுத்து உதவிசெய்த ஊர்களிலிருந்து, சன்மானங்கள் வந்து சேர்ந்தன. அந்தச் சன்மானங்களையும் அதைக் கொண்டுவந்த தூதர்கள் சொன்னதையும் கேட்டதும் அப்பொழுது தான் அவனுக்கு தன் கடைசிப் புத்திரனைக் கொல்லும்படி உத்தரவிட்டது அநியாயமென்று தெரியவந்தது. பிறகு தன் மகன் அநியாயமாய் இறந்தானேயென்று விசனப்பட்டுக்கொண்டிருந்தான். அப்பொழுது கொலையாளி அங்கு வந்து தான் அவனைக் கொல்லவில்லையென்றும் அவன் உயிரோடிருப்பதாகவும் சொன்னான். இது இப்படி யிருக்க அவன் கடைசிப்புத்திரன் தன் தகப்பனுர் தனக்காக விசனப்படுவதைக் கேள்விப்பட்டு தன்மனைவியை அழைத்துக் கொண்டு தன் தகப்பனுரிடம் சென்று அவர் துக்கத்தை ஆற்றினான். இவனை மோசஞ்செய்த இவன் அண்ணன்கள் ஊருக்குத் திரும்பி வரவேயில்லை.

[நீதி.—இக் கதையில் கண்ட தேவவூற்று இன்னும் இன்றைக்கு மிருக்கிறது. முத விரண்டு இராஜ குமாரர்களும் கடைசி இராஜகுமாரனும் இன்றைக்கும் என்றைக்கு மிருக்கிறவர்களே. மூத்தவனுக்குத் 'தாமஸன்' என்றும் இளையவனுக்கு 'இராஜஸன்' என்றும் மற்றொரு பேருண்டு. கடையவனை 'ஸத்துவன்' என்றழைப்பார்கள். சாபத்தால் பிடிக்கப்பட்ட அரண்மனை இதயபுண்டரத்தின் மத்தியில் இன்னமும் இன்றைக்கு மிருக்கிறது. அங்கே தூங்கிக் கொண்டிருந்த இராஜகன்னிகை "ராஜராஜேசுவரியாக" இன்றைக்கும் என்றைக்கும் இருக்கிறாள். அவளைத் தூங்கச்செய்த மந்திரவாதி மாயாவாதி யென்னும் பேரால் இன்றைக்கும் இருக்கிறான். பசியாமருந்தளிக்கும் பரமரகஸியமாகிய ரொட்டியை இன்றைக்கும் தஹராலயமாகிய அந்த அரண்மனைக்குள் "இஷ்டதேவதாசித்தி" யென்னும் கட்டப்பாரையால் திரிகரணசுத்தியோடு மூன்றுதரம் தட்டுகிறவர்கள் கதவு திறக்கப்பெற்று உள்ளே நுழைந்து இன்றைக்கும் எடுத்துக்கொண்டு வரலாம். அற்புதமந்திரவாள் ஆத்மனுயிருக்கப்பட்ட தன்னைத் தவிர மற்றவர்களது தலையை வெட்டிவிடும் சக்தி வாய்ந்ததாயிருக்கிறது. மூன்று இராஜகுமாரர்களின் தகப்பன் பெயரென்ன? என்பதை இதை வாசிக்கிறவர்கள் ஸ்வயமாகக் கண்டு பிடித்துக்கொள்ள வேண்டும். தத்துவமுணர்ந்தோர் அவனை 'அவ்யாகிருதன்' என்பர்.

—வி-சி-ப-ர்]

———:(*):———

## BETRAYED.

**Motto: "Your sin will find you out."**

"காட்டிக் கொடுத்ததே கர்மம்."

"தன்வினை தன்னைச்சுடும்."

——:-:——

யாராவது ஒருவர் எதாவது கெட்ட காரியம் செய்யும் பொழுது அதை ஒருவருக்கும் தெரியாத மறைவிடத்தில் செய்தால் தாங்கள் செய்தது யாருக்கும் தெரியாது என்று நினைக்கிறார்கள். ஆனால் அப்படி நினைக்கும்பொழுது யாருச்கு மறைத்தாலும் தன் மனச்சாக்ஷிக்கும் கடவுளுக்கும் மறைக்க முடியாது என்பதை மறக்கிறார்கள். இதற்கு உதாரணமாக ஒரு கதை உண்டு. அதாவது:—ஒரு தையற்காரன் தன் கையிலிருந்த சொற்ப பணத்தைச் செலவிட்டு ஏழையானான். ஊரில் சாப்பாட்டுக்கு ஒன்றும் அகப்படாது போனதால் இன்னொரு ஊருக்குப்போய் ஜீவிக்கலாம் என்று புறப்பட்டுப் போனான். நடுவில் வழிதப்பி ஒரு பெரிய பட்டினத்திற்குப் போகும் பாதையை அடைந்தான். இரண்டு மூன்று நாள் அந்தக் காட்டில் போஜனமில்லாமல் பசியால் வருந்தும் பொழுது ஒரு மார்வாடி தன் கையில் ஒரு சோற்று மூட்டையோடு வந்தான். அப்பொழுது இந்த தையல்காரன் அந்த மார்வாடியின் எதிரே போய் வழிமறித்துக்கொண்டு அவன் கையிலிருக்கும் சோற்று மூட்டையைக் கீழே வைத்து அவன் பையிலிருந்து நூறு ரூபாய் பணமும் எடுத்து வைக்கச்சொன்னான். அந்த மார்வாடி கையிலிருந்த சோற்று மூட்டையைக் கீழே வைத்துவிட்டு தன் கையில் எட்டு அணாதான் இருக்கிறது என்று சொல்லிக்கொண்டு எட்டு அணாவை எடுத்து வைத்தான். தையல்காரன் ரூபாய் நூறு கொடுத்தால்தான் விடுவேனென்று பன்முறை சொல்லியும் அந்த மார்வாடி எட்டு அணாதான் இருக்கிறதென்று சொன்னதால் கோபங்கொண்டு பக்கத்திலிருந்த ஒரு கல்லால் அவன் தலையில் அடித்து அவனைக்கொன்றான். அந்த மார்வாடி சாகும் பொழுது, "நீ யாருக்குத் தப்பினாலும் சூரிய பகவான் உன்னைக் காட்டிக் கொ[illegible]திரார். உன் மனச்சாக்ஷியும் சும்மா இராது!" என்று சொல்லிக்கொண்டு இறந்தான். தையல்காரன் பிறகு அந்த மார்வாடியின் பையை பரிசோதித்தபோது அதில் அவன் சொன்ன எட்டணாதான் இருந்தது. பிறகு அவன் அந்தச் சோற்று மூட்டையையவிழ்த்துச் சாப்பிடும் பொழுது அவன் மனச்சாக்ஷி அவனை உறுத்திற்று. பிறகு அவன் அந்த மார்வாடி பிணத்தை அப்படியே போட்டுவிட்டு அந்த எட்டணாவை எடுத்துக்கொண்டு ஒரு பெரிய பட்டணம் போய்ச் சேர்ந்து ஒரு பணக்காரத் தையற்காரனிடம் வேலைக்கமர்ந்தான். அங்கு சுறுசுறுப்பாய் வேலைசெய்ததால் இவன் எஜமானன் இவனுக்குத் தன் பெண்ணைக் கலியாணஞ் செய்து கொடுத்தான். எஜமானன் இறந்த பிறகு அவனுக்கு வேறு புத்திரனில்லாமையால் தானே தன் எஜமானனுடைய சொத்துக்கு அதிபதியானான். ஒருநாள் காலையில் இவன் உட்கார்ந்துகொண்டிருக்கும்பொழுது சூரிய கிரணம் இவன் மேல் ஜன்னல் வழியாய் விழுந்தது. சூரிய கிரணங்கள் தன்மேல் பட்டதும் அவனுக்கு தான் மார்வாடியைக் கொன்றபொழுது அவன் சொன்ன வார்த்தை ஞாபகத்துக்கு வர அவன் தன்னையு மறந்து ஹா ஹா, நீ காட்டிக்கொடுத்து விட்டாய் கடைசியில் என்று கத்தினான். இவனது மனைவி வந்து இவனை வற்புறுத்திக் கேட்டதின்பேரில் நடந்ததையெல்லாம் சொல்லி அதை ரகஸ்யமாக வைத்துக்கொள்ளும்படிச் சொன்னான். ஆனால் அவள் மனம் பொறாமல் அதைச் சர்க்காரிடம் சொல்ல அவர்கள் அவனை விசாரணை செய்து தூக்குப் போட்டார்கள். இப்படியாகக் கடைசியில் இவன் மனச்சாக்ஷியே இவனைக் காட்டிக் கொடுத்து விட்டது.

"தன்வினை தன்னைச்சுடும்" என்பதற்கு இன்னொரு திருஷ்டாந்தமு முண்டு.

ஒரு ரத்தின வியாபாரி தனது அடிமை ஒருவனோடு ஒரு ஊருக்குப்போனான். வழியில் ஒரு காட்டில் அந்த ரத்தினவியாபாரி ஒரு ஆற்றங்கரை யருகில் தங்கி அதில் ஸ்நாநம் செய்து திரும்பி வருகையில் அவன் அடிமைக்கு ரத்தினங்களின்மேல் ஆசையுண்டாக அவன் துப்பாக்கியை எடுத்து யஜமானனைச் சுட்டுவிட்டு நகைகளை எடுத்துக்கொண்டு தான் எப்பொழுதும் போயிராத ஒரு ஊருக்கு ஓடிப் போய்விட்டான். அங்கு அவன் கொஞ்சங் கொஞ்சமாய் ரத்தின வியாபாரம் செய்யத் தொடங்கி பெரிய பணக்காரனாய் மிகவும் யோக்யனென்று பெயரும் எடுத்துவிட்டான். இவன் கடைசியில் அவ்வூர் நியாயாதிபதியின் பெண்ணைக் கலியாணஞ் செய்து கொண்டு அந்த நியாயாதிபதி இறந்தபிறகு தானே அந்த ஸ்திதிக்கு வந்தான். அந்த வேலையை நன்றாய்ச் செய்கிறான் என்ற கீர்த்தியும் வந்தது. ஒருநாள் இவன், ஒரு அடிமை தன் எஜமானனைக் கொலை செய்த குற்றத்தை விசாரித்து அந்த அடிமைக்கு மரணதண்டனை விதிக்கும்படி நேர்ந்தது. தண்டனையை விதிக்கும்பொழுது அவனுக்கு கைகால்கள் உதறிற்று. கடைசியில் தன் நினைவு தனக்குத் தெரியாமலே தனது ஆசனத்திலிருந்து கைதி நிற்கும் கூட்டில் பிரவேசித்து அங்கிருப்பவர்களைப் பார்த்து தனது குற்றத்தைச் சொல்லி ஒப்புக்கொண்டு தன்னை விசாரணைசெய்து தண்டிக்கும்படி கேட்டுக்கொண்டான். அப்படியே அவனது சொந்த சாக்ஷியத்தைக் கொண்டே அவனைத் தூக்கிட்டார்கள். ஆகையினால் நாம் நம் மனச்சாக்ஷிக்கு விரோதமான எதையும் செய்யக்கூடாது. நமக்கு என்னதான் ஆயிரம் வந்தாலும் ஆயிரம் போனாலும் நம் மனச்சாக்ஷி அறிய தப்பு என்று தெரிந்ததைச் சொல்லவாவது செய்யவாவது கூடாது.

இரத்தின வியாபாரி நியாயாதிபதி ஸ்தானத்தி லிருக்கையில் ஒரு தப்பும் செய்யாதவனாதலால், தன் கர்மத்தின்வலியை நினைந்து "காட்டிக் கொடுத்ததே கர்மம்! கண்ணை மறைத்ததே வர்மம்!" என்று பாடிக்கொண்டு தன் பிராணனை விட்டான். அப்பாட்டைக் கர்ணபரம்பரையாகக் கேட்டவர்கள் அது பின்வருகிறபடி என்று சொல்லுகிறார்கள்:—

BETRAYED.

"காட்டிக்கொடுத்ததே கர்மம்."

பல்லவி

காட்டிக்கொடுத்ததே கர்மம்
கண்ணைமறைத்ததே வர்மம்!

1 தனிவழிபோகையில்தன்னெஜமானனைத்
தனியிருந்தடிமையாய்ச்சுட்டவோர்பாதகம்
தனையறியாமலேதன் னுள்ளிருந்துபின்
தனையறியாமலேதன் னுள்வளர்ந்திப்போ
எனையறியாமலேயென் னுள்ளிருந்தம்மா
காட்டிக்கொடுத்ததே கர்மம்
கண்ணைமறைத்ததே வர்மம்!

2 யாருக்கொளித்தாலும் ஊருக்கொளித்தாலும்
பேருக்கொளித்தாலும்பிரமனுக்கொளித்தாலும்
வேருக்கொளித்தம்மா விருக்ஷமிலையாம்போல்
மாருக்குள்ளிருக்கும் மனச்சாக்ஷியறியாமல்
யாருக்கும்செய்கர்மம் பேருக்குமில்லையால்
காட்டிக்கொடுத்ததே கர்மம்
கண்ணைமறைத்ததே வர்மம்!

என்று அவன் கர்மத்தின் வலியை நினைந்து பாடிக்கொண்டு பிராணனை விட்டான்.

---

## Sri Sankara A—Sketch.

### ஸ்ரீ சங்கரர்.

ஐந்தாம் அத்தியாயம்.

———:(*):———

ஸ்ரீ சங்கரர் பத்மபாதர் முதலிய சிஷர்களுடன் பிரயாகையினின்றம் புறப்பட்டு மகிஷபதி நகரத்தை யடுத்த வனத்தை யடைந்து மாணாக்கரை யங்குவிடுத்து தாமொருவரே விஸ்வரூப மண்டன பட்டாசாரியரைப் பார்த்துவரப்புறப்பட்டனர். அம்மண்டன மிஸ்ரர் மனைக்கு இரைவா அல்லது நருமதை நதியினின்று ஜலம்திரட்டிச் செல்வாரை நோக்கி மண்டனமிஸ்ரர் மனை யெங்குள்ளதென்று வினவினர்.

2. அவர்கள், அரசன்மனைபோலும் மாடமாளிகைகளோடு விளங்குவதாய், மனைவாயிலில் அலங்காரத்தின் பொருட்டு பல கிளிகள் கூடுகளில் கட்டப்பட்டதாய், அவைகளில் ஒன்று "வேதம் சுதந்திரப்பிரமாணமா? பரதந்திரப் பிரமாணமா? வேதப்பிரமாணம் தானே விளங்குவதா? பிறிதொன்றால் விளங்கும் தரத்ததா?" என்று வினக்களைக்கூற, மற்றொன்ற, "உலகு நித்தமோ? அநித்தமோ?" என்றும், வாதி பிரதிவாதிகளைப்போல பிரசங்கங்கள் செய்யப்பட்டதாய்க் காணப்படுகின்ற மனையே மண்டனமிஸ்ரருடையதெனக் கொள்ளல் வேண்டுமெனக் கூறினர்.

3. ஸ்ரீ சங்கரர் அங்குவந்து அவர் மனைக்கதவு மூடப்பட்டு உச்சிபோஜன காலமாகவும், வேறு மானுஷப் போக்குவரவு இல்லாமலுமிருந்தபடியால், தமது யோகாப்பியாசத்தால் மேலே யெழும்பி மேன்மாடங்களைக் கடந்து மனை முற்றத்தின்கண் இழிந்தனர்.

4. மனைத் தலைவராகிய மண்டனமிஸ்ரர், வேதவியாசரையும் ஜயமுனிவரையும் தம் தவவலிமையினால் வருவித்து பிதுர்கர்மத்திற்கு அவர்களை நிமந்திரணஞ் செய்து பூஜித்துக் கொண்டிருந்தார்.

5. ஸ்ரீ சங்கரர் இதுவே நல்ல தருணம் என்று சமீபத்திற் சென்றனர்.

6. மண்டன மிஸ்ரர் சங்கரரை நோக்கி,—

"குதோமுண்டி?" = சந்நியாசி எங்கிருந்து வந்தது? என்ற கருத்தோடு வினவ, சங்கரர் அதற்கு வேறுவிதமாசப் பொருள் கொண்டு, "ஆகளான்முண்டி' = கழுத்துக்கு மேலிருந்து தலைமழுக்கப் பட்டது என்று கூறினர்.

7. மண்டனர்—"குதः" எங்கிருந்து? "பந்தான்தே புருச்சியதேமயா" என்னால் கேட்கப்பட்டது வழி என்றனர்.

சங்கரர்—அதற்கு உன்னை வழிவினவவில்லை, மார்க்கத்தினை வினவினேன், என்ற பொருள் கொண்டு "கிமः பந்தாः" வழியென்ன கூறிற்று? என்று வினவினர்.

8. மண்டனர்—அதிக கோபங்கொண்டு "தேமாதாரண்டா"=உன் தாய் முண்டை யென்று கூறிற்று, என்றனர்.

சங்கரர்—"துவம் மாதா ரண்டேத்திபாஹ மண்டன?"=மண்டன! உன்தாய் முண்டை யென்று கூறிற்றன்றோ? என்றனர்.

9. மண்டனர்—"சுராபிதாவா"=கள் குடித்திருக்கிறோபோ? என்று வினவினர்.

சங்கரர்—கள் பசுமையதோ? என்று பொருள் படுத்தி, "நஹிசுராசுவேதா"=அல்ல, கள் வெண்மையன்றோ? என்றனர்.

10. மண்டனர்—"அஹோ ஜாநாசி தத்வர்ணம்," ஓகோ! உனக்கு அதன் வர்ணம் நன்றாய்த் தெரியும், என்றனர்.

சங்கரர்—"அஹம் வர்ணம், பவாந்ரஸம்"= நான் அதன் வர்ணமறிவேன், நீரே சுவையுமறிவீர், என்றனர்.

11. மண்டனர்—கர்மனமுடைய துறவி! கழுதையும் சுமக்கமுடியாத பாரமுண்டப கவக்

தியைச் சுமந்துக் கொண்டிருக்கிற வுனக்குக் குடுமியும் பூணலும் எப்படிப் பாரமாயிற்று என்றனர்.

சங்கரர்—உன்னப்பனாலும் சுமக்க முடியாத கவந்தியை சுமந்திருக்கின்றேன், ஆனல் குடுமியும் பூணலும் வேதத்திற்கு பாரமா யிருக்கின்றது என்றனர்.

12. இவ்வாறு சிறிதுநேரம் தர்க்கம் நடந்ததைக் கேள்வியுற்றிருந்த வியாசர், ஜயமுனிவரிருவரும்—

ஐய! விஸ்வரூப! நியமமாக விருக்கத்தக்க கருமகாலத்தில் இல்லறத்தான் வீண்வார்த்தை யாடலாகாது. வேதாந்தங்களுக்கு உடன்பாடாயுள்ள சந்நியாசத்தினைப்பெற்று பிக்ஷைவேண்டி வந்தவனை நீர் உபசரிக்க வேண்டியது விதி. அதனிலும் சிரார்த்த காலத்தில் வந்தால் அவனை விலக்கலாகாது. ஆதலின், எங்களோடு இச்சந்நியாசியையும் நிமந்த்ரணம் செய்து விஸ்வேதேவஸ்தானத்தி லிருத்தி பூஜிப்பாயாக, என்று கூறினர்.

13. உடனே மண்டனர் கோபத்தை யொழித்து ஸ்ரீ சங்கரர் பாதங்களைப் பூஜித்து பிக்ஷையின் பொருட்டு தயை செய்யவேண்டு மென்று வேண்டினர்.

சங்கரர்—நான் சோற்றுப் பிக்ஷையின் பொருட்டு வந்தவனன்று, வாதப் பிக்ஷையின் பொருட்டே' என்று கூறினர்.

14. மண்டனர்—களிப்புற்று "என்னுடன் வாதிப்பவரும் கிடைப்பரோ? நல்லது காலை வாதப்பிக்ஷை தருகின்றேன். இன்று என்பேரில் கிருபைவைத்து அன்னப் பிக்ஷையும் பெற்றுக்கொள்ளி வேண்டும்" என்றனர்.

சங்கரர்—உடன்பட்டோம், என்ற வுடன் மண்டனர் தான் வாயாடிய குற்றத்திற்கு விஷ்ணு ருத்திராதி மந்திரங்களால் பிராயச்சித்தஞ் செய்துகொண்டு, முக்தியே வியாசரை விஸ்வேதேவஸ்தானத்திலும், ஜயமுனியை பிதர் ஸ்தானத்திலும் நியமித்து விட்டபடியால், சங்கர முனிவரை விஷ்ணு ஸ்தானத்திலிருக்கச்செய்து உபசரித்து சிரார்த்தத்தை நிறைவேற்றினர்.

15. பின்பு வியாசர், ஜயமுனி, சங்கரர் ஆகிய மூவரும் ஓர் தனியிடத்தில் வேத ரகஸ்யங்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கையில் மண்டன பண்டிதர் அங்கு சென்று, யாங்கள் இருவரும் வாதிக்கும் போது, நீவிர் இருவரும் கருணைவைத்து மத்தியஸ்தர்களாக விருத்தல் வேண்டுமென்று வியாச, ஜயமுனிவர்களை வேண்டிக் கொள்ள, அவர்கள் மண்டன பண்டிதரை நோக்கி, "விஸ்வரூபரே! கல்வியில் உம்முடைய தர்மபத்நியாகிய உபயபாரதி தேவி, எல்லா முணர்ந்தவராயும் ஒரங்கூறாது நடுநிலைமையைச் செலுத்த வல்லவராயு மிருத்தலின், உங்கள் தருக்கம் அவராலே தானே தீர்க்கப்படு' மென்றுகூறி மறைந்தனர். சங்கரர் உடனே யோகசக்தியால் மேலே கிளம்பி வெளியே வந்து மாணுக்கரைச் சேர்ந்து சமாதி நிஷ்டையிலிருந்தனர்.

16. மறுநாள் ஸ்ரீ சங்கரர் தமது மாணுக்கர்களுடன் மண்டனபண்டிதர் மனைக்குச்சென்று தருக்கத்தின் பொருட்டு ஏற்படுத்தப்பட்டிருந்த மண்டபத்தில் வாத பீடத்தில் வீற்றிருந்தனர்.

17. மண்டனர் சகலகலா வல்லவராகியும் தமது மனைவியுமாகிய உபயபாரதி தேவியை சபைத் தலைவராக வைத்து தனது வாதபீடத்தி லிருந்தனர்.

உபயபாரதியாகிய கற்புக்கரசி சபைநடுவே தலைவியாகவிருந்து இருவரை வாதிகளாலும் தருக்கஞ்செய்து சாதிக்கத் தக்க பொருளிது வென்று வகுத்துக்கொடுத்து ஒரு பெரிய ஜோதிர்மயமாய்த் தோன்றிய வளவிற் கூடியிருந்த உபயகக்ஷிக்காரர்களும் வேறு சப்தமின்றி வாத சூக்ஷ்மங்களைக் கேட்டுக்கொண் டிருந்தனர், சர

ஸ்வதியே இவ்வாதத்திற்கு சாக்ஷியேற்பட்டபடியால், எல்லாத்தேவரும், முனிவரும் சித்தரும் வானவெல்லையில் வந்து நிறைந்தனர். இச்சபையானது சத்தியலோகத்திலுள்ள பிர்மசபையே இங்குவந்ததுபோ லிருந்தது.

19. சங்கர முனிவர் தருக்கத்தில் தோல்வியடைந்தால் சந்நியாசத்தை விடுத்து மண்டனமிஸ்ரருக்கு மாணாக்கராவதென்றும், மண்டனர் தோல்வியுற்றால் சங்கரருக்கு மாணாக்கராய்ச் சந்நியாசத்தைப் பெற்றுக்கொள்ள வேண்டியதென்றும் இருவகையாரும் உடன்பட்டு வாதிக்கத் தொடங்கினர்.

20. சங்கரர், பரமார்த்த சத்திய ஸ்வரூபமாயும் மலமற்றதாயும் உள்ள பிர்ம்மம் ஒன்றே. அஞ்ஞானமென்னும் மறைப்பினால் கிளிஞ்சில் வெள்ளியாகத் தோற்றியது போல இந்த உலகெல்லாம் தானாய் ஒளி வீசுகின்றது. இப்படிப்பட்ட மாறுபாட்டுக்கு முதலாகிய பிர்மஸ்வரூபமானது, அவித்தையும் அதன் காரியமாகிய பிரபஞ்சமும் ஞானத்தால் விட்டொழிய, மீண்டும் பிறவாமல் தன் வடிவமாகவே தானிருத்தல் முக்தி என்றனர்.

21. உடனே மண்டன பண்டிதர், ஞானமூர்த்தியாகிய பரமான்ம வஸ்துவினிடத்தில் வேதம் பிரமாணமாவதில்லை. அந்தப்பொருள் உண்டென்பதே பிரசித்தியல்ல. கருமசம்பந்தமில்லாத அந்த வஸ்துவிடத்தில் எந்த சக்தியும் பற்ற மாட்டாதாகையால் கருமங்களினாலே தான் முக்தி யுண்டாக வேண்டியது. மனிதர் பிழைத்திருக்கும் வரை அதைச் செய்துக் கொண்டே யிருக்கவேண்டும், என்றனர்.

22. இப்படி அவரவர் சாதிக்கவேண்டிய வரம்பைப் பற்றிநின்று, வைதீக நித்திய கர்மங்களுக்கும் உண்டி முதலிய உலக கருமங்களுக்கும் வேண்டும் காலமொழிய மற்றைய காலமெல்லாம் ஓய்வில்லாமல் வாதஞ்செய்து வந்தனர்.

23. பின்பு தருக்க சபைக்குத் தலைவியாகவிருக்கும் உபயபாரதி, வாதிப் பிரவாதிகளிருவர் கழுத்திலும் தோல்வி வெற்றிக்கு அறிகுறியாக பூமாலைகளை மந்திரித்துச்சூட்டி, அம்மாலைகள் எப்பொழுதும் வாடாத இயல்புடையன, ஆதலால் யார்கழுத்தில் பூமாலை எப்பொழுது வதங்கி யுலர்ந்து விடுமோ அப்பொழுது அவர் தோல்வி யடைந்தனரென்று சபையோர் அறியத்தக்கது என்று கூறி, தருமவினைகளை நிறைவேற்றும் பொருட்டு தன்மனைக்கண்ணே சென்றனர்.

24. வாதிகள் இருவரும் தம் தம் கருத்துக்கு ஒக்குமாறு தருக்கம், மீமாம்சம், வேதாந்தம் முதலிய நியாயங்களை எடுத்துக்காட்டி வாதிக்கக் கேட்டிருந்தோர், நல்லயுக்தி, இதுவே நியாயம் என்று கூறிவருவதால் ஒவ்வொருவருக்கும் ஊக்க மதிகரிக்க, நாளும் வளர்ந்து வந்தது.

25. இதைக்கேள்வியுற்ற பலநாட்டிலுள்ள பெரிய வித்வான்களும், ஞானிகளும் மேன்மேலும் வந்து சேர்ந்தனர்.

26. நித்தமும் உச்சிப்பொழுதில் உபயபாரதியார் தமது கணவர் சந்நிதியடைந்து "போஜனகாலமாயிற்"றென்றும், சங்கரர் பாலடைந்து, பிக்ஷாகாலமாயிற்றென்றும்,—தெரிவிக்க, யாவரும் எழுந்துசென்று பகற்கடனோடு குக்ஷிபாதையையும் தீர்த்துக் கொண்டுவந்து வாதத்திற்குத் தொடங்குவர்.

27. இவ்வாதத்தில் மேல்நோக்கி யோஜித்தல், சிறிதுநேரம் மௌனமாயிருத்தல், முந்திப் பிழைகூறிப் பின்திருத்திக்கொள்வது, மறந்து கூறுவது, தான்முந்தி கூறியதற்கு முரணாகப் பின்கூறுவது, பிரமாணமாகாததைப் பிரமாணமாகக் கூறுவது, மெய்நடுக்கம், வியர்வை கோபித்தல் முதலிய துர்க்குணங்கள் காணப்படவில்லை, எச்சமயத்திலும் வாதிகளின் முகம்

அமைதியோடும் புன்னகையோடும். கம்பீரமாய் விளங்கின.

28. ஜீவனுக்கும் ஈஸ்வரனுக்கும் பேதமில்லையென்று ஸ்ரீசங்கரர் கூற, மண்டனமிஸ்ரர் பேதத்தைச் சாதித்தனர். சங்கரர் அதனை மறுத்தொழித்தனர். இவ்விருவருக்கும் நடந்த வாதமுறைகளெல்லாம் எழுதப்பட்டு "மஹாவாதாவளி" என்னும் பெயர்பெற்ற பன்னீராயிரங்கிரந்தமாயிற்று.

29. இவ்வாறு பதினெட்டு நாள் வாதம் நடந்த பிறகு ஸ்ரீ சங்கரருடைய அத்வைத சித்தாந்தங்கள் உறுதிப்பட, அவற்றை உடைக்க மாட்டாத மண்டன பண்டிதர் கழுத்திலிருந்த தெய்வ மலர்மாலை வதங்கிக் கருகிவிட்டது. இவ்வாதினைப் பிரத்தியக்ஷமாய்க் கேட்டுக்கொண்டிருந்த யாவரும் மண்டனர் தோற்றனரென்றும் சங்கரர் வென்றனரென்றும் உணர்ந்தனர்.

30. நடுநிலையோடு சத்தியத்தை அணியாகப் பூண்டு மத்தியஸ்தராய் நின்ற உபயபாரதியார் சபைநடுவே நின்று உபயவாதிகளையும் நோக்கி 'பிக்ஷைகாலமாயிற்று' என்றுகூறி மண்டன பண்டிதர் சந்நியாசத்தை ஏற்கவேண்டுமென்று குறிப்பித்தனர்.

31. உடனே சரஸ்வதி அவதாரமாகிய அவ்வுபயபாரதியார் ஸ்ரீசங்கரரைப்பார்த்து வெற்றிகொண்ட அத்வைத சிகாமணியே! துருவாசர் எனக்கிட்ட சாபம் சிவாவதாரமாகிய உமது வெற்றியால் தீர்ந்தது. இனி எங்கிருந்து வந்தேனோ அங்கு செல்கின்றேன் என்று கூறி, மாலை, புஸ்தகம், கிளி, வீணை தாங்கிய கரங்களோடு, வெள்ளைக்கலையுடுத்தி வெள்ளைப்பணி பூண்டு, வெள்ளைக்கமலத்தில் வீற்றவராய் சத்தியலோகத்தை நோக்கி ஜோதிப் பிரகாசமாய் செல்லத்தொடங்கினர்.

32. ஸ்ரீசங்கரர் உடனே துர்க்கை மந்திர ஜெபத்தால் அக்கலைமாதினை சத்தியலோகம் செல்லவொட்டாது பந்தித்தார். அதனால் சரஸ்வதிதேவி ஆகாயத்தைவிட்டுக் கீழே இறங்கி, கால்நிலத்திற்படாதபடி அந்தரமாகநின்று சங்கரரை நோக்கி, உமக்கு வேண்டிடும் வரம் யாதென்று கேட்டனர்.

33. சங்கரர் உடனே "வாகீச்வரீஸ்தவம்" என்ற ஸ்தோத்திரத்தினைச்செய்து பிரார்த்தித்து என்னம்மே! ஞானவடிவே! அத்வைதம் இவ்வுலகத்தில் இன்னும் வலிவுள்ளதாய் நிலைநிறுத்தப்படவேண்டும். அடியேன் விண்ணப்பிக்கும் வரை கருணையோடு இங்குவீற்றிருந்து, வேண்டும் போது சாக்ஷிகொடுத்து அனுக்கிரகஞ் செய்யவேண்டு"மென்று வேண்டிக்கொண்டனர். சரஸ்வதி அதற்குடன்பட வாதிகளிருவரும் களித்தனர்.

T. C. வேங்கடரமணய்யர்.

———:(*):———

## Navaratri Poojah 1912.

## நவராத்ரி பூஜை (1912,)

———:———

வாகீச்வரீஸ்தவம்.

"துர்க்காலக்ஷ்மிஸரஸ்வதிதேவீ
மஹிஷாஸுரமர்த்தநீஜய!
வித்தியாலக்ஷ்மீப்ராஹஸ்பதீம்வந்தே
அத்தியர்த்மிகசாந்தநீதுபவ!
வித்யாரம்பதிநேவிஜயதசமியாம்
ஹேஅமிர்தநேதுவாம்வந்தேதுஸர்வதா."

—*Navaratri 1904.*

நிஷ்டானுபூதி.

"அலையுமனத்தையகத்தடக்கு மவனேசரிதைகடந்தோனும்
அலையுமனத்தையகத்தடக்குமவனேகிரியைமுடிந்தோனும்
அலையுமனத்தையகத்தடக்கு மவனேயோகதற்பரனும்
அலையுமனத்தையகத்தடக்கு மவனேஞானியதிஞான்."

—ஸ்ரீவித்தைஸம்பூரணம் 1905.

He who merges the wandering Mind (uncontrolable) in the Self he in sooth hath completed his task of collecting materials (for ideal-building.) *

---

* *Vide*—"Gleanings on the way from Earth to Heaven, with chart of Life, 1906."

To be had of the Lalita Publishing Co., 19, Adam St., Mylapore, for Rs. 1—10 by V. P. P.

He who merges the ever thinking Mind in the Self, he hath done his work in sooth.

He who merges the ever modifying Mind in the Self, he hath verily attained to the Highest Yôga.

He who ever merges the emerging Mind in the Self is the Knower of Brahm and the Greatest Hero.

*Nishtanubhûthi—20th July 1910.*

### Three Words of Strength.

There are three lessons I would write.—
Three words as with a burning pen,
In tracings of eternal light,
Upon the hearts of men.

HAVE HOPE. Though clouds environ now,
Gladness hides her face in scorn,
Put thou the Shadow from thy brow,
No night but hath its morn.

Have FAITH. Whenever thy bark is driven,—
The calm's disport, the tempest's mirth,—
Know this,—God rules the hosts of heaven,
The inhabitants of Earth.

HAVE LOVE. Not love alone for one,—
But man, as men, thy brothers call.
And scatter like the circling sun
Thy charities on all.

Thus grave these lessons on thy soul,—
Hope, Faith, and Love, and thou shalt find
Strength, when life's surges rudest roll,
Light, when thou else wert blind."

—*Schiller.*

(Vide *Viveekachintamani* for December 1905, Vol. XIV. No. 8. p. 230. for a Tamil Version of this under "மூன்று மந்திரம்.")

### முதல் மந்திரம்—"Have Hope."

"சத்திக்கு வித்தர் தனது பசாந்தமே".—திருமந்திரம்.

### I. சாந்தித்தைக்ஷ—வன்ருவனே வேலவருதல். (1)

"சாந்தனையுந் தியனவே செய்திடினுந் தாமவரை
ஆந்தனையுங் காப்பர் அறிவுடையோ" ரென்ருேதிச்
சாந்தனையு மென்னுடனே கூடவிருந் தெனையேவி
யாந்தனையு மல்லவெல்லா மனுகவொட்டா தெனை
[யாண்டான்

வேந்தனையும் ஆந்தனையும் அருமையாம் நட்பாக்கிக்
கூந்தற்பனை யோலையிலே 'கூடாநட்பைக்' காட்டு
[வித்து
எந்தற்கிடங் கொடுத்தவனை யேங்கவைத்துத் தூங்
[கச்செய்து
மாந்தர்படும் பாட்டை யெல்லாம் மண்ணிற்பட வை
[ந்தவனே
வேந்தர்படும் பாட்டைக்கண்டு வேலவனுய் வந்துந்
[த்தான்.

### இரண்டாம் மந்திரம்—Have Faith.

"பக்திக்கு வித்துச் சிவபரத்தாருதல்."—திருமந்திரம்.

### II. நேதிபேதம்-மந்திரவாளருளல். (2)

"ஸத்தியம்மாதா பிதாஞானம் தர்மோப்ராதா தயாஸ
[கா:।
சாந்திப்பத்நி க்ஷமாபுத்ரா ஷடைதேமமபாந்தவா:॥"
என்றுநித்யம் ஓதியுள்ளே யெனையுமறந் திருந்தேனை
கன்றுநீதெனுந் தவத்துவமெலா மொன்றிவில்லை
[யில்லையென்றே
மன்றிலாடு மாதவன்றன் கூத்தையெல்லாங் காட்டு
[வித்து
ஒன்றிலொன்று மில்லைமத் திரண்டுமில்லை யொன்
[றிலென்று
அன்றுமின்று மென்றுமுள்ள தொன்றேயொன்றி
[லதுவுமன்று
இன்றுமன்று மென்றுமுள்ள தொன்றையேந் பார்த்
[திரென்ருன்!
இன்றுமன்று மென்றுமுள்ள தொன்றைப்பார்த்த
[சொர்த்திகேனே!

(1) These are the very words of the heavenly Lancer—the Divine Policeman commissioned to preserve God's Peace:—"Do good in return for evil. No one is under your protection. You and your family are alike under the wing of God. This is an opportunity to test your qualities of Patience (க்ஷமா) and Peacefulness (சாந்தி). It will be a disappointment to ME if you fail to stand the test. There is no such thing as abuse and insult. Borne patienly these things are honours."

(2) Thus spake again in the still Silence of the Soul the Divine Lancer (God's own Policeman bent on preserving GOD'S PEACE on earth and GOOD WILL among men,) investing *Servus Servorum Dei* with the Sword of Wisdom."GOD has plased you as a shield (கவசம்) and protection (ரக்ஷா) to your 'NEIGHBOUR'. (You must rise up and prove equal to the task.) You talk of *qualifiying* and *modifiying* and *compromise* with regard to PRINCIPLES that are ABSOLUTE. You have not been harassed and annoyed sufficiently. You have not been sufficiently humbled. Why should I interfere? Suffering is the LEAVEN which brings people up to the MARK. If they take the *Lesson* at once there is no suffering. They have not attained it and without the *means* they cannot achieve the *end*. Help and and protect them by elevating them, not by satisfying the passions which are evil and which demand satisfaction."

## மூன்றும் மந்திரம்—"Have Love."

"அன்பும் சிவமு மிரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாருமறிகிலார்' —திருமந்திரம்.

### III. அபரோக்ஷானுபூதி-கோடிபடை வீடளித்தல். (3)

"உள்ளம் பெருங்கோயி லூனுடம் பாலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய்கோபுரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம் [கிரமம்.
கள்ளப் புலனைந்துங் காளாமணி விளக்கே".—சிவபூஜைக்

### துவஜாரோஹணம்—குக்குடாயநமஃ।

பார்த்திருந்தேன் பார்வைகெட்டுப் பார்த்தது
[வும் பார்வையாச்சு !
ஆர்த்திருந்தேன் ஆரவங்கெட்டு ஆர்த்ததுவும்
[ஆர்வமாச்சு !
கார்த்திருந்தேன் காவலற்று காத்ததுவும் காப்
[பாச்சு !
வேர்த்திருந்தேன் வேலையற்று வேர்ப்பதுவும்
[வேல்தானுச்சு !
தீர்த்திருந்தேன் தீர்க்கமுற்று தீர்த்ததுமதி தீர
[மாச்சு !
பார்வையொடு கேள்விகெட்டு பரப்ரஹ்மம் ஆ
[னவனே
பார்ப்பான்நீ யல்லவென்றான் ப்ராஹ்மணனும்
]அல்லவென்றான்
பார்ப்பானெடு பார்வைகெட ப்ராஹ்மணனும்
[ப்ராஹ்மமானுன்
கேட்பாரில்லா வூரிலம்மா கேள்வியற்றவ னிரு
[ந்சலானுன்!

(3) In presenting again the DIVINE FLAG of Discrimination( *Kukkuda-dhrajam*)and the mystic weapon which 'conquers the Enemy"—*Kamastram*, with the Armour of Light (*Virekachintamani karacham*) to *Servus Servorum Dei*, the Lord of Hosts and Teacher of the Teacher, the Son of God, addressed Himself to the Soul in piteous cry of Grievance merged, responding to its prayer "O Lord! Save us from all evil!" thus:—"What is all this talk of grievances and rights and possession! There is no grievance that is not a benefit; no right except to humility; and no possession that is due except truthfulness. Thus armed, disarm your neighbour and uproot his hatred by your Love. Love thy neighbour as thy own Self." "LOOK AT ME! Give Me thy heart! Adore Me! Serve Me! Cling in Faith and Love and Reverence to Me! So shalt thou come to Me! I promise true for thou art sweet to Me! And let go those rites and writ duties! Fly to Me alone! Make me thy single refuge. I will free thy soul of all its sins. Be of good Cheer!"

### IV. த்வஜாவரோஹணம்—தீக்ஷாவிபூதி.

கேள்வியற்றுப் போனவொரு காரணத்தை யுன்னிப்
[பார்க்க
வேள்வியற்றப் போனவொரு காரணமும் தோன்ற
[லாச்சு
வேள்விபெற்ற வென்னவென்று வேணமட்டு மாய்
[ந்துபார்க்க
கேள்வியில்லா வூரிலது தக்கன்†வேள்வி. யென்ற
[தாச்சு
வேள்விதக்கன் செய்தபோது வேற்றுமையால் புத்தி
[கெட்டு
வேள்விமூலமாம் நாதனைத்தள்ளி வீணிலதைச் செய்ய
[லானுன்
வேள்விமுதலாந் தானுவுமப்போ வேறுபட்டுமா பைர
[வானர்
வேள்விக்குவந்ததன் பிதாவென்றெண்ணி நண்ணிய
[தேவியை ஒறுக்கலாகவும்
வேள்விமுதலே பைரவராகித் தக்கன்தலையைச் சே
[திக்கலானுர்.

### V. தர்மஸ்வரூபம்—தர்மாம்பிகை.

பதிமோசஞ் செய்யவும் சதிமோசம் வந்ததுபார் !
பதிமோசஞ் செய்யார் சதிமோசம் போகார் !
பதிமோசஞ் செய்தபின் சதிமோசம் வந்தக்கால்
கதிமோசந் தானுகும் விதிமோசம் நேர்ந்திடும்
பதிமோசஞ் செய்தவோர் தக்ஷப்ர ஜாபதியும்
சதிமோசம் வந்துற்றுக் கதிமோசம் போனபின்
விதிமோசம் வாராமல் தடுக்கவென் றேபின்னும்
ரதிமோசம் வாராமல் பண்டனுக் கருவீன்றான்
மதிமோசம் போனுற்குப் பசவுருத்தான் தந்தாளே !

### VI. தபத்தபஃ—உமாதேவி.

பதியுருவந் தான்மறைந்து ‡ பசுவுருவம் வந்தபின்
சதியுருவந் தான்சென்று மலையரையன் மகளாகப்,
பதியுருவம் அருவாகிப் பல்கால் தபலிருக்கச்
சதியுருவும் பாலையாய் வளர்ந்ததுபார் வெட்பறையில்!
சதிபதி தர்மமப்போ தடைப்பட்டு நின்றதம்மா !
சதியவளும் பதியைவேண்டித் தபஸிருக்கப் போகை
[யிலே
பதிவசமாய் வந்தவொரு மேநகையாந் தாயுமப்போ
விதிவசத்தால் மகளையுன்னித் தபஸிருக்க வேண்டா
[மென்று
சதிவசத்தா லிவளுமப்போ "உ-மா"வென் றுரைத்
[தாளே !

† தக்கன் அஞ்ஞான் வுருவாதலால் 'தக்கன் வேள்வி' யென்பது அறியாமையால் அகங்கரித்துச் செய்யும் காரியமாகும்.

‡ ப்ராஜாபதி தன்னுருவிழகது,—என்றபடி.

## VII. மோனசத்தி.

"மோனமென்பது ஞானவரம்பு."

"உ-மா"வென் றுரைசெய்த உச்சிதமாங் காரணத் [தால்
உமாதேவி யானகன்னி மஹேச்வரரைத் தியானி [த்து
உமாவிருதம் தானிருக்க உத்தமரும் கேட்கவில்லை !
மாதேவ ரப்போமா மரத்தடியில் தபவிருந்து
மாசித்தர் நால்வருக்கு மோனமுத்ரை யளித்திருந் [தார்!
மாதேவர் மௌனத்தில் மூழ்கியே யிருந்ததனால்
உமாதேவி செய்தபஸூ உத்தமர்க்கு எட்டவில்லை !
மாதேவர் கைப்பிடித்த மோனமுத்ரை தான்பரவி
மாலோக மெல்லாமப்போ மௌனமா யிருந்தது [காண் !

## VIII. பேதவிருத்தி—பேதாள உற்பத்தி.

மோனமெங்கும் பரவியம்மா நாதமெங்கு மொடுங்கி [யதால்
மோனசக்தி யாலப்போ நாதசக்தி யொடுங்கலாச்சு!
மோனுஸ்திரம் பட்டுலோகம் கேள்வியற் றிருந்தது [காண் !
மோனுஸ்திரம் பட்டப்போ கேள்வியற்றிருந்தலோகம்
மோஹனுஸ்திரம் பட்டிப்போ கேள்வியற் றிருக்குது [காண் !
மோனத்துக்கும் மோஹத்துக்கும் வித்தியாஸம் என் [னவுண்டோ,
கானத்திற்கும் காகத்திற்கும் வித்தியாஸம் என்ன [வுண்டோ,
தீனத்திற்கும் ஈனத்திற்கும் வித்தியாஸம் என்னவு [ண்டோ
வானத்தின்கீ ழென்னவோ ரழிவித்யாஸங் † காண [லாச்சு!

## IX. "மஹிஷாஸுரமர்த்தநீஜய!"—ஸரஸ்வதி பூஜை.

வித்தியாஸத் தாலுலகம் வேதாளத்தின் வசமதாக
வித்தியாஸத் தாலேசெய்த வினைகளும் பழுத்துதிர
வித்தியாஸத் தாலேலோகம் வேறுபட்டு நாசமாக ‡
வித்தியாஸத் தாலேவந்த கேடுகள்தான் மாறவாக
வித்தியாப்பி யாஸம்செய்ய வேதமுதலும் உற்பவிக்க
வித்தியாப்பியாஸத்தாலேவேதியெல்லாங்கண்டுதெள்ளி
வித்தியாப்பி யாஸம்செய்வார் வித்வத்லக்ஷியங் கண் [டேஉய்ய
வித்தியாப்பி யாஸஞ்செய்ய வித்தையும்ஸ்ரீ தேவியா [னள்
வித்யாதேவி யானவந்த விமலையைநாம் பூஜைசெய் [வாம்.

## X. விஜயதசமி—வில்லம்புவிடுத்தல்.

"தசமியிலே சாகரத்துக் கப்பாலேறிச்
சிலம்பொலியு முனதுடைய இருக்கால்கண்டு
நிசமாக ஸ்தூலசூக்ஷும மத்தில்தோன்றி
நிஷ்களத்தில் நீயும்நானும் ஒன்றேயாகி
அறிவில்லா ஆனந்த மயமேயாகி
அருள்வடிவாய் வரமருள்வா யகண்டரூபி! [வாய்
சுசிவழியாய் சுசிமுகமாய்ப் பிள்ளைமுகம்பார்த்தாள்
சோதியே மனோன்மனியே சுதினவாழ்வே!"
பசியாமருந்தளிக்கும் பரையேகேள் ஓஓஓமென்
றன்னடிமை யோலமிட் டலறுமுறை!
நிசியானபேரிருளை நீக்குவிக்கும் பராபரையே
பண்பாயம் முறையிடு கேட்டம்மேபரிசரிப்பாய்!
நசியாத மாயையெல்லாம் நயமாயுன்
வசமாக்கும் அபரையே சரணமம்மா !
அசிபதத்தா லுனையடைந் தேன் அன்பேயென்
றழுதே யருட்கண்வைத் தெனையாண்டாய்
நசியாதிவ் வுடலமென்றே நாதபிந்துசேரவிட்டு
வில்லம்புவிடுத்தவென்றன் விமலையே சரண்சர [ணே:

## XI. திருமந்திரமாலை: தோத்திரக்கொத்து.

"ஒன்றவன் தானே இரண்டவ னின்னருள்
நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந்தான் ஐந்து
வென்றனன் ஆறுவி ரித்தனன் ஏழும்பர்ச்
சென்றவன் தானிருந்தா னுணர்ந் தெட்டே"

(யொன்றவொரு நவவ்யூகம் தானுகப் பொருந்தியம்மா!)

"தீரும்திலனும் விசும்பங்கி மாருத
தாரும்உடம்புறு சோதியுமாயுளன்
பேரும்பராபரன் பிஞ்ஞகனெம்மிறை
யூரும் சகலன் உலப்பிலிதானே!"

ஓம்தத்ஸத்.

† இதுவே பேதாள உற்பத்தியாம்.
‡ ஸர்வமஹாநாயம் சம்பவிக்க.

# "Dusserah," or "The Meaning of The Mystic Number Ten."

—:-:—

**(By C. V. Swaminatha Iyer, K. S. S. A.)**

Motto :—"I am only a child" "I took prasadham: You called me 'Anjaneya."

"Girls up to the age of ten inclusive are named in Devi-Bhagavatham as fit for Navaratri Sarasvathy's worship." This sentence in one of the letters published in a local contemporary of 18th October, made me think of what it may mean. Epictetus in one of his pregnant aphorisms has summed up the Law of the Universe in one word which is "Number," as he has summed up the Law of Life and the Law of God each in one word. "Evolution" is the word which summarises the Law of Life, as "Unity" is the word which expresses the Law of God. Let us take this aphorism about the Law of the Universe and examine it.

"Number is the Law of the Unverse." Unit is the basis of the science of numbers. And whatever its value may be, it is generally called "One." Though one always represents the Unit, it is ever composed of many parts all of which we call fractions. This Universe is One. But it is composed of Nine parts which are called *Nara-Vyuha*, each a collection of parts or category by itself. "Navaratri" means the nine nights. Night is of the Essence of Devi, as Light is of the Essence of God. It represents Moola-prakriti or primordial matter. Navaratri is devoted to the worship of Durga-Lakshmi-Saraswati, the three-fold aspects of Devi who is One only and yet many for purposes of creation, preservation and destruction. She in Her manifested state is *Trigunatmika*, as She in her unmanifested condition is *Trigunatheetha*. The first three nights are dedicated to Durga, the Tamasic aspect of Devi who is the Material Cause of the Universe. The next three nights are sacred to Lakshmi, the Rajasic aspect of Devi who is the Instrumental or Co-efficient Cause of the Universe. The last three nights are dedicated to the worship of Saraswati, the Satvic aspect of Devi who is the Efficient Cause of the Universe. For, She it was who "in the beginning was the Word"—*Vak Devi*. It is from *Parai Vak* that all things are made, that were ever made. It is the beginning of creation. And the origin of Parai Vak is to be found in Syamala Devi (another name for Durga in her creative aspect as Material Cause.) She is also the destructive cause as everything evolved ultimately merges by involution in its original source. Devi as material cause was first evolved from the Ever Existent One. And John refers to this in the first verse of his remarkable Gospel, generally known as the Fourth Gospel of Christ, by these words: "In the beginning was the Word." In the beginning of Evolution Devi was alone as the Material Cause of the Universe. Then She became the co-efficient cause by becoming an Instrument in the hand of God for the creation of the Universe. And this is referred to by the words: "The Word was with God." Having become instrumental or co-efficient cause, She became the Efficient Cause also by Her undifferentiating Oneness with God in which aspect She is the *Abinna-Sakti* (the inseparable Energy of God.) And this is referred to in the words: "The Word was God." From this three-fold Cause was created all that ever was created.

Navaratri then is merely the mystic symbol of Universe manifesting itself in Number. "The One only without a second" evolved itself into the Number One which is the First Cause of all creation. The One became twofold and the two-fold by the process of Evolution became three-fold. This three-fold "First Cause" by further Evolution or reproduction of itself in new forms and combinations according to the Law of Number multiplied itself and became the Mystic Number *Nine*, (the ninth day being *Mahanavami*) and itself became merged in nought (the original chaos which is inexpressible by any symbol but that of homogeniety), the homogenous mass which not being capable of separate existence attached itself to One, the Prime Cause, and thus came into existence the mystic number ten (10) symbolising the mystic union of the Self and the non-self, of life and matter, of body and soul—the *alpha* and *omega* of personal existence, the supreme triumph of the Spirit over matter. This is the tenth day, the Day of Triumph (Vijaya-Dasami) in which the powers of Light or Cosmic Order chase away the powers of Darkness or disorder and chaos. And a girl of ten is the living symbol of Innocence representing the highest potentialities of the Human Race.

I can quote chapter and verse from English and Indian mystics to support this view, which is the correct spiritual view to take of this national festival called *Dusserah* or *Navaratri*, the days of introspection *par excellence* and hence the Pooja Holidays. I have been systematically worshipping *Devi* these ten years during the days devoted to Her Worship which come naturally after the *Sarvamahalaya Amavasai*, and strange as it may seem, I have been appealed to, by a novice who has seen me some years ago, to expound the mystery of Navaratri this Poojah season. As I do not give individual instruction now to anyone by post or in person, I have chosen to state publicly my view of *Navaratri* which really is not *my* view, but the "whole-view" of it, which each and everyone must by self-effort realise for oneself under proper guidance.—*The Madras Dailies.*

# GOD'S TRUTH.
## Religion and Science. *
## Dr. Horton's Reply to Dr. Schafer.
### The Final Problem Elusive still.

Dr. Horton preached a notable sermon at Dyndhurst-road Chapel, Hampstead, upon the theory of the origin of life propounded by Dr. Schafer before the recent meeting of the British Association.

Let us suppose he suggested to his hearers, that Dr Schafer is right—that life might be produced at some future epoch by the careful arrangement of chemical elements. Did that seem to strike at the roots of faith and to discredit the heavenly origin of which humanity is partially conscious?

His reply was—No, Because the fact remains that I am I. Between that I,—whether it was the 'I' of Dr. Schafer or of any other man—and the chemical product called life of which Dr. Schafer had spoken, there lay so incalculable and unaccountable a difference that it mattered little how this elementary life began.

* * *

"Though you explain the origin of life, though you make the cells and show how the cells build up the body yet the human being in that body escapes you. You do not explain it; you have not discovered it."

Giotto's Tower, Dr. Horton pointed out in an illustrative passage, is not the same thing as the marble of which it is composed. It is a spiritual creation—the creature of Giotto's mind. Reynolds' "Age of Innocence" "is not a thing of paint and canvas, but a spiritual reality, the product of imagination and insight. In the same way, a man is not merely the matter of which he is made.

"The situation" said the preacher, "is not altered by Dr. Schafer's address. It is the same situation which existed when Professor Tyndal delivered his famous Belfast address, the same that was discussed by Democritus or Lucretius. No discovery can ever alter it. No scientific achievement can ever shape the question otherwise than it is for ever shaped.

### God's Truth.

"The physicial origin of life is a speculation still, and may be for some time to come. But if it ever ceases to be a speculation and is established as a proved fact, I for one shall accept it without reserve, and without fear, directly it is proved it is God's truth.

"But the spiritual life and its origin is an experience—a FACT in the strictly scientific sense of the word which had been demonstrated at every period in the history of mankind."

The spiritual, he urged, is its own eternal authority for saying that even if it grows out of the material it has not come from the material. It is the spiritual alone that think and speaks and knows. "அதுவானால் அதுவாவர் அதுவே சொல்லும்."—*Says St. Thayumanavar.*

———:(o):———

## ஏகம் ஸத்யம் ப்ரஹ்ம.
### பராபர வித்தைகள்.

டாக்டர் ஹார்டன் என்பவர் லண்டன் சர்ச்சு (Church) மிஷனைச் சேர்ந்த ஒரு பாதிரியார். இவர் கிறிஸ்து வருகையைப்பற்றி யொரு பிரசங்கம் செய்துளார்.

"ஆண்டாண்டுதோறு மழுதுபுரண்டாலும்
மாண்டார்வருவாரோ மாநிலத்தீர் ?"

என்றுசொன்னது பொய்யல்ல. ஆனால் கிறிஸ்து என்னும் நாமம் அவருடைய தேஹத்தைப்பொருந்தியதல்ல. தேஹம் அழியப்பிறந்ததே! எத்தனைகாலம் இருந்தாலும் கடைசியில் அழிய வேண்டியதே. ஆனால் கிறிஸ்துநாமம் அழியும் தேஹ சம்பந்தமாயுள்ளவருக்குரியதல்ல, அழியாத புனித வுடம்பெடுத்தவரான சுத்தாத்மனுக்கே யுரியது. அந்த சுத்தாத்மன் திரும்ப வருவாரென்றால் அர்த்தம் என்ன? வாய்மையால் அஹம் தூய்மையானபோதெல்லாம் அவர் தஹராலயத்தி னின்றும் புறப்பட்டு வந்துகொண்டேயிருக்கிறார். சமஷ்டி வியஷ்டி பாவத்தால் உள்ளபேதத்தினால்நித்யமான தத்துவங்களுக்கு கேடுவராது. அவர் என்று மிருப்பது இதய கமலத்துள்ள தஹராலயத்தில். இந்தத் தஹராலயத்தில் நுழைந்து அவரை தரிசனம் செய்தார்க்கு அவர் பிரத்தியக்ஷமாகிறார் என்பது சத்தியம். உள்ளத்துறை குஹன் கள்ளங் கரையக் கரைய மெள்ள வெளிப்புறப்படுகிறார். அந்தப் புறப்பாட்டையே அவர் திரும்பி வருவதாகச் சொல்வது. ஏனெனில் ஆதியில் ஆத்மன்

* Religion=பரவித்தை. Science அபரவித்தை.

ப்ரஹ்ம சைதன்யமாகவே யிருக்கிறான். அவித்தியா சம்பந்தனானபிறகுதான் கடவுள் அவன் கண்ணுக்குக் கரந்' துறைகிறார். அப்படிக் கரந்துறையும் கடவுளை இதயசுத்தித் துவாரா "கமலாலயம்" என்கிற தஹராலயத்தில் தரிசித்தவர்க்கு அவர் புறப்பாடெய்திப் புனர் தரிசன மளிக்கிறார். இதையே ஸ்வாத்ம தரிசனமென்றும், கிறிஸ்து வருகையென்றும் பலவாறு சொல்வது.

டாக்டர் ஷாபர் என்பவர் உயிர் உற்பத்தியாகும் மூலத்தைக் கண்டுபிடித்துவிட்டதாகச் சொல்லி ப்ரிடிஷ் அஸ்ஸோஸியேஷன் முன் ஒரு வியாசமெழுதி வாசித்தார். வாதவித்தை கற்றவர்கள் இரும்பைப் பொன்னாக்குவதுபோல ரஸாயனமர்ம முணர்ந்தவர்கள் பல ரஸங்களைக் கூட்டி ஜீவ அணுக்களை யுண்டுபண்ணலாமென்றார். ஜீவஅணு வென்றால், இவர்கள் அர்த்தம் செய்துகொள்வதென்னவென்றால், அணுப்பிரமாணமான தேஹத்தை யுடைய ஜீவன் என்பதே.

டாக்டர் ஹார்டன் இதற்கு ஓர் நல்ல ஜவாபு சொல்கிறார். அணுப்பிரமாண தேஹத்தையுடைய ஜீவ அணுக்களை டாக்டர் ஷாபர் சொல்லியபடி ரஸாயன விதிப்படி சிருஷ்டிக்கலாமென்பது உண்மையாக ஒப்புக் கொண்டாலும், எங்கும்போல் டாக்டர் ஷாபரிடத்திலுமிருந்து அஹம், அஹம் என்றெழும் அஹம் தத்துவத்தின் மூலம் கண்டுபிடித்தாரில்லையே. அது இவர்களுடைய புலனறிவுக் கெட்டாததாகத்தானே யிருக்கிறது! சிறதேகங்களையுடைய ஜீவாணுக்களைச் சிருஷ்டித்தாலும் அணுவினு மணுவாய் மஹத்திலும் மஹத்தாயிருந்துறையும், அஹம் தத்துவத்தை அறிந்தார்களில்லையேயென்கிறார். இது உண்மை.

"அவன் கண்ணே மருமாந் வழியினல்லால்," அவனை இத்தகையன், இந்நிறத்தன், இவ்வண்ணத்தனென்றெழுதக் காட்டொணாதே! யென்று பெரியோர் கூறியுள்ள உண்மையையே வற்புறுத்திக் கூறுகிறார்.

சிருஷ்டித்தல் முக்காரணத்தால் நடப்பதென்பதை இவர்கள் அறியவேண்டும். கர்த்தா, கருவி, உபாதனம் என்றுள்ள முக்காரணங்களில், அன்பே யுருவாயுள்ள அத்துவித வஸ்துவே சக்திமானாயிருக்கிற காரணத்தால் மூலகாரணமாகிறார். அவரே கர்த்தா. அவருடைய இணைபிரியாச்சக்தியே கருவி காரணமாம். அந்தச்சக்தியின் ஜடாப்சமே உபாதனம். இதை தாமஸப் பிரதானமென்பர். இதிலிருந்து சிருஷ்டி ஈசுவர சற்பனையாக வுண்டானது. அந்த சிருஷ்டியிலும ஈசுவரசிருஷ்டி, மாயாசிருஷ்டி யல்லது ஜீவசிருஷ்டி யென்றும் இருவகைப்படும். ஈசுவர சிருஷ்டி யென்பது ப்ரஹ்மாண்ட முதல் அணு வீறாகவுள்ள எல்லாமாகும். அந்த ப்ரஹ்மாண்டத்துக்கு சரியாகவுள்ள பிண்டாண்டத்திற்கு அதிஷ்டான தேவதையான அவித்யா உபாதிகனாகிய ஜீவன் ஈசுவர சிருஷ்டியோடொத்து வியஷ்டி பாவத்தில் சிருஷ்டிக்க வல்லவனாவன். The Law of Attunenent என்கிற ஸமாத்மஸம்பத்தினால் ஜீவேசுவரபேதம் அற்றுப் போகிறது. இந்த சிவசிருஷ்டிக்குச் சாக்ஷியாயிருப்பவன் கூடஸ்தன் என்கிற பிரத்தியகாத்மா. இதற்கு ஜீவசாக்ஷியென்று பெயர். ஈசுவரசாக்ஷிக்கு ஸர்வசாக்ஷி யென்றுபேர். ஸம்ஸாரம் முதல் மோக்ஷம் ஈறாகவுள்ள அவஸ்தைகளெல்லாம் ஜிவ சிருஷ்டியே.

ஜகத் சிருஷ்டி இப்படியாக, ஜீவன் என்னமாயுண்டானான்? என்கிற கேள்வி யிருக்கவேயிருக்கிறது. அநாதிமல முக்தனான அத்துவிதக் கடவுளே, தனது சக்திபேதப் பிரவிருத்தியால் தன்னில் ஓர் அம்சமான ஜீவனானான் என்பதே நில்யான உண்மை; இதைச் சக்தியின் அவாந்தர பேதத்தாலுண்டான அனந்தசக்தியின் காரியமாயுண்டான மாயையமக்கறுத்தாலன்றி

மற்றவர்கள் உணர மாட்டார். அவர்களுக்கெடுத்துரைப்பதும் அநர்த்தமே.

"பிரகிருதியினுண்மையில் பரமனைக் காணலாம்." ஆதலால் பிரகிருதி சாஸ்திர ஆராய்ச்சியும் ஆத்ம ஞானத்துக்கு அனுகுணமானதே. இது அவித்யாசம்பந்தமானதாயினும், அவித்தையை (அறியாமையை) அறிந்தாலன்றி வித்தையை (அறிவை) உணர முடியாது. அறிவு அறியாமை, இரண்டையு முணர்ந்தபின், அறிவுக்கறிவாய், உயிருக் குயிராயுள்ள உண்மைச் சக்தியாம் அருட்சக்தியின் அனுக்ரகத்தால் அருள்வடிவாகி, அருட்கண்ணால் அவனையறியவேண்டும். இதுவே முடிவான சித்தாந்தம், வேதாந்தமும் இதுவே.

---

## Tolstoi's Hygienic Maxims.

:o:

TOLSTOI'S maxims on hygiene which brought him to hale old age are being distributed throughout the Russian Empire. They are very sensible and may be summarized as follows :—

1. Fresh air, day and night.
2. Daily exercise.
3. Moderation in eating and drinking.
4. One hot bath weekly and a cold one daily.
5. Comfortable and not over-heavy clothing.
6. A dry, spacious and sunny dwelling.
7. Scrupulous cleanliness.
8. Regular and intensive work which acts as a preventive against ills of body and mind.
9. Rest after labour must not be sought in distractions, night was intended for sleep.
10. The chief condition for good health is a life fruitful in labour and ennobled by good actions. (*Progress.*)

:*:

## டால்ஸ்டாயின் சுகாதார நீதிகள்.

:(o):

டால்ஸ்டாய் மிகவும் முதிர்ந்த வயதை அடைந்து ஜீவித்திருந்தும் திடங்குன்றாது பலங்குறையாது ஆயுராரோக்கியம் பெற்றிருந்ததின் இரகசியம் அவர் அனுசரித்துவந்த சுகாதாரநீதிகளால் விளங்கும். அவைகளை இப்பொழுது ருஷியாதேசத்து ஜனங்களெல்லாரும் அனுசரிக்கும் பொருட்டு பிரபலமாய்ப் பிரசுரித்து வருகிறார்கள். அவைகள் உண்மையானவையும் மிகவும் சாமான்யமானவையுமாய் இருக்கின்றன.

அவை பின்வருமாறு:—

1. இரவும் பகலும் நல்லகாற்றை சுவாசித்தல்.
2. தினமும் ஏதாவது தேகப்பயிற்சி செய்தல்.
3. சாப்பிடுவதிலும் குடிப்பதிலும் மிதமாயிருத்தல்.
4. வாரத்துக்கு ஒருதரம் வெந்நீரிலும் தினமும் பச்சைத்தண்ணீரிலும் நீராடல்.
5. நல்லசுத்தமான ஆடை உடுத்திக்கொள்ளுதல்.
6. ஈரங்காக்காத மேட்டுப்பாங்கான ஸ்தலத்தில் நல்ல காற்றுவரும் விசாலமான வெயில்படும் வீட்டில் இருத்தல்.
7. சிறிதும் அழுக்கு அசுசிக்கிடங்கொடுக்காமல் (தேஹமும் மனமும்) சுத்தமாயும் சுசியாயுமிருத்தல்.
8. கருமமேகண்ணாகச் செய்யவேண்டிய வேலைகளைச் செய்தல் (இதனால் தேஹமனோவியாதிகள் அணுகா.)
9. வேலைக்குப்பிறகு இளைப்பாறுதல், இராத்திரியில் வெகுநேரம் வேலைசெய்யாதிருத்தல்.
10. எப்பொழுதும் நல்லகாரியத்தைச் செய்துகொண்டு இருத்தல். (நல்ல சித்தம் இருதய சுத்தியைத்தரும்.) "வாய்மையால் அறமும் தூய்மையாம்."

:o:

## The Law of Life Alone Conquers.

## தர்மமேஜயம்.

:(*):

"ஸத்யமேவ ஜயதே."—சுருதி.

(188—வது பக்கத்தொடர்ச்சி)

சென்ற சஞ்சிகையில் மைத்திரேயன் நவமணி மாலையை எடுத்துக்கொண்டு வசந்தசேனையின் வீட்டின் அமைப்பைக் கண்டு வியந்து

கொண்டே வசந்தசேனை யிருக்குமிடம் சென்றான் என்று சொன்னோமல்லவா? அவன் போனபொழுது வசந்தசேனை கமலப்பூக்களில் அன்னப் பறவைகள் வீற்றிருந்து விளையாடும் தெள்ளிய நீர்நிறைந்த ஒரு வாவிக் கரையில் நவரத்தின சகிதமாய்க் கட்டிய உத்தியான மாளிகையிலிருந்துகொண்டு, அவன் வரவை எதிர்பார்த்திருந்தாள். அவனைக் கண்டவுடனே அவள் எழுந்து நமஸ்காரஞ் செய்துநிற்க, அவனும் அவளை ஆசிர்வதித்து ஆசனத்தில் உட்கார்ந்தான். பின்பு வசந்தசேனை அவனை நல்வரவு விசாரித்துச் சாருதத்தனது யோகக்ஷேமங்களைப் பற்றி வினவ, மைத்திரேயன், கடவுளுடைய கடாக்ஷத்தால் யாதொன்றுங் குறைவில்லை; அவருடைய காரியமாகவே நான் இப்பொழுது உன்னிடம் வந்தது. நீ அவரிடம் அடைக்கலமாக வைத்திருந்த உடைமைகளை அவர் பேதமின்றித் தமதாகவே பாவித்துச் சொக்கட்டானாடித் தோற்றுவிட்டார்; உடனே அந்த ஆட்டக்காரர்கள் எங்கேயோ ஓடிவிட்டார்கள்; தேடியும் அகப்படவில்லை. அந்த நகைகளைத் தேடிப்பிடித்துக்கொண்டு வருகிற வரையில் இந்த ரத்தினமாலையை நீ அதற்கு ஈடாக வைத்திருக்கவேண்டுமென்று மிகுந்த வணக்கத்துடன் உன்னுடன் சொல்லி இதைக் கொடுத்துவிட்டு வரும்படி அவர் திட்டஞ் செய்தார். நீ மனம் பெரிதுபண்ணி இதைவாங்கி வைத்துக்கொள்ள வேண்டும் என்று சொல்லி அதை அவள்கையில் கொடுத்தான். அப்பொழுது அவள் தன்னிடம் வந்திருக்கும் திருட்டு நகைகளை அவனுக்கு காட்டிவிடலாமா என்று நினைத்தாளாயினும், வேண்டாம்; சற்று நிதானிப்போமென்று உடனே தனக்குள் துணிவு செய்து, சேடிமுகத்தைநோக்கிப் புன்னகை செய்துகொண்டே அந்த மணிவடத்தை கையில் வாங்கிக் கொண்டாள். பிறகு மைத்திரேயனை நோக்கி ஐயா நான் இன்று மாலையில் அவ்விடம் வரவேண்டுமென்று நினைத்திருப்பதாய்த் தமது நண்பரிடம் தெரிவிக்கவேண்டுமென்று சொல்லி அவனை செலவுகொடுத் தனுப்பிவிட்டு, தானும் அவ்விடம் செல்வதற்கு வேண்டிய சன்னாகங்கள் செய்துக்கொண்டிருந்தாள்.

மணிமாலையைக் கொடுக்கவரும்பொழுது மைத்திரேயன், தான் கொடுத்தாலும் வசந்தசேனை அதை வாங்கிக்கொள்ளமாட்டாள், திருப்பிக் கொடுத்துவிடுவாளென்று நினைத்துக்கொண்டே வந்தான். அதற்குமுன் தன்நகை தன்னிடம் வந்து சேர்ந்திருக்குமாயின் அவள் அவ்வாறே அந்தத் தாழ்வடத்தை திருப்பிக் கொடுத்திருப்பாள். மைத்திரேயன் தான் நினைத்திருந்தபடி அவள் அதைக்கொடாமல் எடுத்துக்கொள்ளவே அவளிடத்தில் அதிக கோபங்கொண்டவனாகி, என்னதான் உத்தமிபானாலும் வேசிபுத்தி ஒருநாளும் மாறாது. அவர்களுக்கு எப்பொழுதும் அகப்பட்டவரையில் பொருளைப் பறிப்பதில் திருஷ்டியேயன்றி, யோக்கியதையில் அணுவளவேனும் திருஷ்டி கிடையாது என்று மனதில் வெறுத்துக்கொண்டே சாருதத்தனிடம் சென்றான். சென்று கடுத்த முகமாகவே நடந்தவாற்றைக்கூறி, நீ காசுபறிக்கும் வேசையினிடத்தில் நேசம் வைத்து மோசம்போகாதே யென்று அவனைக் கண்டிக்கத் தொடங்கினான். சாருதத்தன் அதற்கென்ன சமாதானம் சொல்லியும் அவன் கேளாமல் நீ கொடுத்தனுப்பிய மணித்தாழ்வடம் போதாதென்று இன்னும் ஏதேனும் பறித்துக்கொள்ளச் சாயங்காலம் தானே நேராக வருவதாகவும் அவள் என்னுடன் சொன்னாள். அன்றியும் நான் அதைக்கொண்டு போய்க் கொடுக்கும்பொழுது, சேடியும் அவளுமாய் என்னைநோக்கி நகைத்தார்கள் என்றான்.

இதற்குள் மாலைவேளை யாகிவிட்டது. அடிவானம் கறுத்து, மேகமெழும்பி மழைபெய்யத் தொடங்கியது. ஆயினும் தான் நினைத்தபடி சாருதத்தனிடம் அவசியம் போய் வரவேண்டு

மெனத் அணிந்து தனது சேடியுடனே வசந்தசேனை புறப்பட்டுச் சென்றாள். சென்று அவன் வீட்டிற்குப்போய் அவள் தான் வந்திருப்பதை வேலைக்காரர் மூலமாய்ச் சாருதத்தனுக்குத் தெரிவித்தாள். அதைக் கேட்டவுடனே மைத்திரேயனுக்கு மிகுந்த கோபாவேச முண்டாகியது. சாருதத்தன் அவனை சமாதானப்படுத்தி வசந்தசேனையை அழைத்துக்கொண்டு வரும்படிச்சொல்ல, அப்படியே அவன் அவளை அழைத்துக்கொண்டு வருவதற்கு எதிர்கொண்டு சென்றான். மைத்திரேயனைநோக்கி வசந்தசேனை உங்கள் சூதாடி யெங்கே யிருக்கிறாரென்று கேட்க, அவன் இதோ இந்த பாழுந்தோட்டத்தில் உட்கார்ந்திருக்கிறாரென்றான். அதன்மேல் அவள் மைத்திரேயனுடன் சாதுரியமாய்ப் பேசிக்கொண்டே அவ்விடம்சென்று முறைப்படி அவர்களுக்கு மரியாதை செய்து அவர்கள் அனுமதியின்மேல் அண்டையில் உட்கார்ந்தாள்.

உட்கார்ந்த உடனே அவளைச் சாருதத்தன் நல்வரவு விசாரிக்க, வசந்தசேனை, தான் முன்னமேயே யோசனை செய்துகொண்டு வந்தபடியே தங்கள் ஆட்டம் நன்றாக நடக்கிறதாவென்று கேட்டாள். நீ வந்ததனால் எல்லாம் நன்றாகவே நடக்கிறது. நீ இந்த மழையில் முன்னெற்றி மயிர் நனைய மேலாடை நனைய புடவை நனைய வந்தது வெகு ஆச்சரியம் என்று சொல்லிச் சாருதத்தன் அவளுக்கு நல்லதாய் வேறு புடவை கொண்டுவந்து கொடுக்கும்படி திட்டஞ்செய்தான். அப்படியே கொண்டுவந்து கொடுக்க அதை யவள் அணிந்துக்கொண்டாள்.

பிறகு மைத்திரேயன் வசந்தசேனையை நோக்கி அம்மா நீ இந்த மழையிலும் இருட்டிலும் மாலை வேளையில் இவ்விடம் வந்ததேது என்று கேட்க, அவள் நீங்கள் கொடுத்த ரத்தினமாலை என்னவிலையென்று விசாரித்துப்போக வந்தேனென்ன, அவன்தோழன் காதோடு நான்சொன்னது சரியாய் விட்டதல்லவா என்றான். அதற்குள் அருகே நின்றிருந்த வசந்தசேனையின் சேடியானவள் அந்த மணிமாலையை இவர் பேதமின்றி தமதாகவே பாவித்து சொக்கட்டானாடி தோற்றுவிட்டார். உடனே அந்த ஆட்டக்காரர்கள் எங்கேயோ ஓடிப்போய் விட்டார்கள். தேடியும் அகப்படவில்லை. (இவ்வாறு பாதி சொல்லிக்கொண் டிருக்கையிலேயே மைத்திரேயன் நான சொன்னதையே திருப்பிச் சொல்வதுபோலிருக்கிறதே என்றான்.) அந்த நகையைத் தேடிக்கொண்டு வருகிறவரையில் அதற்கீடாக இந்த நகைகள் தம்மிடமிருக்கட்டும் என்றுசொல்லித் திருடன் கொண்டுவந்து கொடுத்த நகைகளை அவனெதிரே வைத்தாள். மைத்திரேயன் மிகவும் ஆவலாய் அவைகளை உற்றுப்பார்க்க சேடி இதென்ன இவ்வாறு கண்பூத்துப்போகப் பார்க்கிறீரே! நீர் இதற்குமுன் கண்டதுண்டோ என்றதற்கு, அவன், இல்லை வேலைத்திறமை வெகு விசித்திரமாயிருக்கிறதென்று பார்க்கிறேன் என்றான்.

சேடி அதுகேட்டு ஏமாறி 'நீர் முன்பார்த்த நகைகளை' யென்றுசொல்ல மைத்திரேயன் விழித்துப்பார்த்து ஓகோ நமதுவீட்டில் களவுபோன நகைகள்போ லிருக்கின்றனவே: இது உங்களிடம் எப்படி வந்தது என்றான். சாருதத்தனும் உற்றுப்பார்த்து அந்த நகைகளேயெனத்தெரிந்து வியப்படைந்தான். பின்பு அவர்கள் அதன் வரலாற்றை ஒருவருக்கொருவர் விவரமாய்ப் பேசிக்கொண்டார்கள். அப்பொழுது சாருதத்தன் தனக்கு அந்த சந்தோஷ சமாச்சாரம் சொன்ன சேடிக்கு ஏதேனும் ஒரு வெகுமதி அளிக்கவேண்டுமென்ற எண்ணங்கொண்டு தன் உடம்பை யெல்லாம் தேடினான். ஒரு பொருளும் அகப்படவில்லை. அது கண்டு அவன் பெருமூச்செறிந்து தலையைக்குனிந்துகொண்டு ஆ! வறுமையினாலாகிய சிறுமையை என்னென்று சொல்லலாம். பல்லைப்பிடுங்கின பாம்பும் நீர்வற்றிய குளமும் சிறகொடிந்த பறவையும், வற்றியுலர்ந்த மரமும் வறியனுக்கொப்பாகின்றன. தரித்திரனுக்குக் கருணை உண்டாயினும் கோபம் உண்டாயினும் இரண்டும் வீணேயல்லவா! [illegible]

இப்புவியில் உயிரோடிருப்பதைவிட இல்லாதிருப்பதே நலமென்று தனக்குள்ளே சிந்தித்து சிந்தைகலங்கி நின்றான்,

அப்பொழுது வசந்தசேனை சாருதத்தனை நோக்கி, ஐயா நீங்கள் இந்த நவமணிமாலையைக் கொடுத்தனுப்பி என்னை இவ்வாறு அவமானப் படுத்தலாமா என்று வினவினாள். அதற்கு அவன் நீ யாவும் தெரிந்தவளாகையால் நான் உனக்கு அதிகமொன்றுஞ் சொல்லவேண்டியதில்லை, ஊரார்வாய்க்கு அஞ்சவேண்டியிருக்கிறது, தரித்திரத்தின் கொடுமை நாலுபேரும் நாலுவிதமாய். பழித்துக்கூற தொடங்குவார்கள். நான் நல்ல நிலையிலிருக்கையில் உன் பொருளை யொளித்து வைத்துக்கொண்டு களவு போய்விட்டதென்றாலும் கேட்போர் நம்பி விடுவார்கள். இந்த வறுமை நிலையில் உள்ளபடி உரைத்தாலும் என் பேச்சு யாருக்கும் உண்மையெனத் தோன்றுதல்லவா? எனக்கு ஒரு பழிச்சொல் வந்தால் அது உனக்கும் வந்தது போலவேயன்றோ? அதற்காக நான் இவ்வாறு செய்தபடியே யல்லது உன்னிடத்தில் அவநம்பிக்கை கொண்டதனாலன்று; நீ வேறுவிதமாக நினைக்க வேண்டாமென்று சொல்லி சமாதானப்படுத்த அவள் நீங்கள் என்ன சமாதானம் சொன்னாலும் அது எனக்கு அவமானமாகவே தோன்றுகிறதென்றாள்.

இவ்வாறு இவர்கள் பேசிக்கொண்டிருக்கையில் மறுபடி மேகங்கறுத்துப் பெருமழை பொழியத் தொடங்கியது. அது கண்டு அவர்கள் இனி இங்கே இருக்கலாகாது உள்ளேபோக வேண்டுமென்று எல்லோரும் எழுந்து சென்றார்கள்.

வர வர மழையும் அதிகமாகியது;இடியு மின்னலும் மிகுதியாயின. மழை தாரைகள் யானைத் துதிக்கைகள் போலப் பெரிது பெரிதாகப் பேரிரைச்சலுடன் வீழ்ந்து தரையைத் துளைக்கலாயின. அவ்வாறு மழை பொழியும்பொழுது அவர்கள் விநோதமாய் பேசிக்கொண்டே இராத்திரி நெடுநேரம் கழித்து விட்டார்கள். அதன் பிறகு வசந்தசேனை வீட்டிற்குப்போக வேண்டுமென்றெண்ணி வானத்தை நோக்கி இந்தக் காடாந்தகாரத்தில் கொட்டுகிற மழையில் வீட்டுக்குப்போவது அசாத்தியமென்றறிந்து, அங்கேயே நின்று விட்டாள்.

மறுநாள் உதயமாயிற்று. காலையில் எழுந்து சாருதத்தன் வழக்கப்படி வெளியே உலாத்திவரப் புறப்பட்டான். அப்பொழுது வசந்தசேனை நித்திரை தெளியாதிருக்கவே, எழுந்தவுடன் அவளைத் தன் வண்டியிலேற்றிப் புஷ்பகரண்டக வனத்திற்கு அழைத்து வரும்படி வண்டிக்காரனுக்குத் திட்டஞ் செய்து தான் முன்னே சென்றான். அவன் சென்ற சிறிது நேரத்தில் வசந்தசேனை விழித்தெழுந்தாள். அப்பொழுது சாருதத்தனுடைய செல்வ மகனை ரோஹசேனன் அண்டை வீட்டுப்பிள்ளை பொன்வண்டி வைத்து விளையாடுவது கண்டு, எனக்கு இந்த மண்வண்டி வேண்டாம். அத்தன்மையதான பொன் வண்டிதான் வேண்டுமென்றுபிடிவாதம் பண்ணிப் புலம்பிக்கொண்டிருந்தான். அக்குழந்தையைப் பார்த்து வசந்தசேனை பரிதாபமுற்றுத்தான் அணிந்திருந்த நகைகள் அனைத்தையும் கழற்றிக்கொடுத்து பொன் வண்டி பண்ணிக்கொள் என்றாள்.

அப்பொழுது வண்டிக்காரன் வாயிலில் வந்து வண்டி சித்தமாயிருக்கிறது. உத்தியானவனத்திற்கு புறப்படலாமென்று கூவினான். அதுகேட்டு வசந்த சேனை உடைதரித்து வரும்படி உள்ளே சென்றாள். இதற்குள் வண்டிக்கு மெத்தைபோட்டுக் கொண்டுவர மறந்து போனதனால் அம்மாள் உடை தரித்துக் கொள்ளுவதற்குள் வந்துவிடலா மென்று மெத்தை போட்டுக்கொண்டு வர வண்டிக்காரன் வண்டியை ஓட்டிக்கொண்டு போயினான்.

அந்த வண்டி அப்புறம்போன தருணத்தில் சகாரனுக்காகத் தோட்டத்திற்கு கொண்டு போகப்பட்ட வண்டி யொன்று அவ்வழியாக வந்து, எதிரில் ஒரு வண்டி குறுக்கே நிற்கவே போக வழியின்றிச் சாருதத்தன் வீட்டு வாயில் ஓரமாய்ச் சற்று நின்றது. அந்த சமயத்தில் வசந்தசேனை வந்து பார்த்து அதுவே தனக்காக வந்திருக்கிற வண்டியென நினைத்து அதிலேறி யுட்கார்ந்து கதவை மூடிக்கொண்டாள். உடனே வண்டிக்காரன் வண்டியை சகாரனிடம் ஓட்டிக்கொண்டு போய்விட்டான். விரைவாக வேவண்டி தோட்டம்போய்ச் சேர்ந்தது.

(இன்னும் வரும்)

——:(*):——

## WELCOME ADDRESS TO THEIR EXCELLENCIES LORD AND LADY PENTLAND.

**"The Cinderella of the Empire" to Her Incoming Lover.**
**The Guardian Spirit of Madras to Her Governor.**

சென்னைமாதேவி தன் தலைவனைக்கண் டுரையாடல்

The following *overseas message* voicing the Responsive Echo of *England* to the Plaintive Cry of "*Suffering Madras*" was received by the same mail week as brought Their Excellencies Lord and Lady Pentland to our shores and it has been publicly plaeed at the Altar of Public Opinion and dedica'ed to "the Cinderella of the Empire" by Her 'lone-become Child who uttered "the Orphan's Cry" of Humanity in tears of suffering which chased the Darkness of Night ushering in the Light of Dawn.

*"The Voice of England"*] [*To "Suffering Madras."*

*The Overseas Message of the Spirit to Cinderella.*

"I hope your troubles are now over. It is grievous to think that those who may not like you should be in a position to harass you and interfere with the efforts which have so long been making for the good of your fellow countrymen. I was about to add that it was also grievous to think that your own PEACE OF MIND was disturbed by your recent experiences; but you have assured ME that you can look back on these events with CALMNESS. By the time you get this (Message of the Spirit) Lord Pentland will be among you. I hope you will like him as Governor and will find that he sympathises with your ideals and aims. Lady Pentland is, I am told, a charming lady. (I do not know either of them personally.)"—*"The Voice of England" to "Suffering Madras." England 10th October 1912.*

## INVOCATION.

**The Rousing of Public Spirit.**

"பொதுப்பள்ளி யெழுச்சி."

Motto: "I stand for Truth. Truth will never ally itself to falsehood. Even if all the world should be against me, Truth must prevail in the end."—*The Eternal Voice of India's True Son.*

I.

"Hail! Spirit, Source to me of all life's joys!"
Arise! the darkest hour of Night has fled!
The earliest hour of Dawn is come, and with it,
The Light of Public Life! Awake! Arise and throw off thy sleep!

II.

"Darkness and Dawn" was once the burden of my Song!*
"The darkest hour has its dawn!" was then my only hope!
Awake, Arise! Lo! the Sun has neared the Eastern bound!
Darkness departs and Dawn broadens out 'nto boundless Day!,

——(:o:)——

## The Guardian Spirit of Madras to Her Governor.

## சென்னைமாதேவி தன் தலைவனைக்கண் டுரையாடல்.

பல்லவி.

வாரும்! வாரும்! ஐயாவென் துரையே!
தேவியுட னெனைக்காக்க வாரும்வாருமையா!

அனுபல்லவி.

வருக! வருகவென் றுமையான் வருந்தியழைக்கவே
வாரும்வா ருமையா! தர்ம்மதுரையே!

சரணங்கள்.

1. படாத பாடெல்லாம் பட்டனுபவித்தபின்னர்
கெடாத படியெல்லாங் கெட்டுநான் தேறினேன்!
வாரும்! வாரும்! ஐயாவென் துரையே!
தேவியுட னெனைக்காக்க வாரும் வாருமையா! —(வருகவருகவென்)

2. பட்டதோர் பாடெல்லாம் பழவினை யாலென்று
சட்டமாய்க் கண்டுநான் திட்டமா யிருந்தேன்!
வாரும்! வாரும்! ஐயாவென் துரையே!
தேவியுட னெனைக்காக்க வாரும் வாருமையா! —(வருக!)

3. தன்னயம் தேடாது சொன்னயங் கொண்டேநான்
பொன்னயம் பாராது பொய்யுடன் பொருதிட!
வாரும்! வாரும்! ஐயாவென் துரையே!
தேவியுட னெனைக்காக்க வாரும் வாருமையா! —(வருக!)

4. "யதார்த்த வாதியவன் வெகுஜனவி ரோதி"யென்பர்
யதார்த்த மாகவ்வதைக் கண்டறிந்து விண்டேனுன்!
வாரும்! வாரும்! ஐயாவென் துரையே!
தேவியுட னெனைக்காக்க வாரும் வாருமையா! —(வருக!)

5. என்னுரை யுண்மைகண் டெனையொறுத்த வர்களெல்லாம்
பின்னுரை செல்லாது பிணங்கியே படுத்தினர்காண்!
வாரும்! வாரும்! ஐயாவென் துரையே!
தேவியுட னெனைக்காக்க வாரும் வாருமையா! —(வருக!)

6. பண்டைமுதற் கொண்டேநான் தொண்டையற விட்டொழித்து
மண்டையோடு காயமா தபவிருந்தே னுமையுன்னி!
வாரும்! வாரும்! ஐயாவென் துரையே!
தேவியுட னெனைக்காக்க வாரும் வாருமையா! —(வருக!)

7. தபவிருந்து தனையறிந்து எனைமறந்து மனையிழந்து
மனவிழைத்த மாயைதாண்டி யெமையறிந் துமையழைக்க
வாரும்! வாரும்! ஐயாவென் துரையே!
தேவியுட னெனைக்காக்க வாரும் வாருமையா! —(வருக!)

8. ஊருக்கு ழைத்திநா னுதாரி யாயினேன்
பேருக்கு ழைத்தவர் படுத்திய பாட்டால்காண்!
வாரும்! வாரும்! ஐயாவென் துரையே!
தேவியுட னெனைக்காக்க வாரும் வாருமையா! —(வருக!)

9. சக்திக்கு வித்துத் தனதுபசாந்தம்போல்
முக்திக்கு வித்துப் பராபரந் தானுதல்
வாரும்! வாரும்! ஐயாவென் துரையே!
தேவியுட னெனைக்காக்க வாரும் வாருமையா! —(வருக!)

10. மனதை யடக்கிமா யோகமுஞ் செய்தபின்
எனதை யடக்கியே இன்னலைத் தவிர்த்தேனுன்!
வாரும்! வாரும்! ஐயாவென் துரையே!
தேவியுட னெனைக்காக்க வாரும் வாருமையா! —(வருக!)

11. என்னுயிர் தவித்தவோர் தவிப்பையென் சொல்லாற்சொல்வேன்
மன்னுயிர் பட்டவோர் பாடெல்லாம் பட்டேனுபால்!

வாரும்! வாரும்! ஐயாவென் துரையே!
தேவியுட னெனைக்காக்க வாரும் வாருமையா! (வருக)

12. என்துரை கார்மிகேல் எனைவிட் டகலவும்
வன்புரை மாந்தர்தம் வலியால்மெ லிந்தேனன்!

வாரும்! வாரும்! ஐயாவென் துரையே!
தேவியுட னெனைக்காக்க வாரும் வாருமையா! (வருக)

13. மன்னவன் காலடியில் மண்டியிட் டிறைஞ்சி யம்மா!
பொன்னவன் கார்மிகேல் போன்றவன் வேண்டுமென்றேன்

வாரும்! வாரும்! ஐயாவென் துரையே!
தேவியுட னெனைக்காக்க வாரும் வாருமையா! (வருக)

14. என்துயர் கண்டவன் என்னுயிர் கொண்டவன்
வன்துயர் எல்லாமுன் வாவாலே போமென்றான்! *

வாரும்! வாரும்! ஐயாவென் துரையே!
தேவியுட னெனைக்காக்க வாரும் வாருமையா! (வருக)

15. எனையாள வந்ததீ ரெனையறிந் தாளவும்
மனையா ளபர்டீன்சேப் உமக்கிணை யாமென்றான்!

வாரும்! வாரும்! ஐயாவென் துரையே!
தேவியுட னெனையாள வாரும் வாருமையா! (வருக)

16. தர்மம் தலைகாக்கத் தரணியை யாள்விரேல்
வர்மம் தலைசாயச் செய்வன்மை யுமக்குண்டாம்!

வாரும்! வாரும்! ஐயாவென் துரையே!
தேவியுட னெனையாள வாரும் வாருமையா! (வருக! வருகவென்)

ஓம்தத்ஸத்.

30-10-1912.
சிந்தாமணிக்ரஹம். சென்னைமாதேவி.

———:※:———

* "You may feel assured that Lord Pentland has got the true instincts of a statesman and is imbued with the cardinal principles of Liberalism."

"Legislators and administrators worked by faith, not by sight. It was not given to them to see the results of their work. It was rather their duly to apply fearlessly to the circumstances of the times, principles which they knew to be sound—to do right and fear not."
—*Lord Pentland at Edinburgh.*

## His Excellency The Rt. Hon'ble Lord Pentland.

## மகாகனம்பொருந்திய கவர்னர் லார்டு பெண்டலாண்டவர்கள்.

———:(*):———

1912-ம் ௵ அக்டோபர் ௴ 30௳ புதன்கிழமை காலை ஏழரை மணிக்கு ஸிஸிலா என்ற நீராவிக் கப்பலானது சென்னைத் துறைமுகத்துள் வந்து சேர்ந்தது. அதற்கு முன்தினம் மாலை வரவேண்டியதாயிருந்த அந்த ஸ்டீமரானது அன்றையதினம் இரவு 11 மணிக்கு ஹார்பார் நோக்கிவரவும் துறைமுக விதிகளின் பிரகாரம் ஹார்பருக்கு வெளியிலே அது தங்க வேண்டியதாயிற்று. புதன்கிழமை காலை பைலட் போய் அந்தக்கப்பலை துறைமுகத்திற்குள் அழைத்து வந்ததும் ஆக்டிங் சீவ் செக்ரிடெரி மிஸ்டர் ஏ. ஜி. கார்டியூ, ஹார்பர் டிரஸ்ட் போர்ட் சேர்மன் ஸர் ப்ரான்ஸிஸ் ஸ்பிரிங், ராணுவக் காரியதரிசி காப்டின் வி. ஆலன்ஸன் ஆகிய இம்மூவரும் புறப்பட்டுப்போய்ப் புதுக் கவர்னரையும் லேடி பெண்ட்லாண்டையும் நல்வரவு கூறி யழைத்தார்கள். பிறகு துறைமுகத் தென்பாரிச முன்னணியில் கவர்னர், லேடி பெண்ட்லாண்டு, அவர் குழந்தைகள் எல்லோரும் இறங்கினார்கள். அவ்விடம் கவர்னரை எதிர்கொண்டழைத்தவர்கள்:—மதிராஸ் கார்பரேஷன் பிரஸிடெண்ட் மிஸ்டர் பி. எல். மூர், போலீஸ் கமிஷனர் மிஸ்டர் பி. ஹானிங்டன், மதிராஸ் கலெக்டர், மிஸ்டர் எப். ஹானிங்க்டன், ஷெரீப் ஏ. இ. லாசன், பிரஸிடென்ஸி போர்ட்டாபீஸர் கம்மாண்டர் ஹட்ல்ஸ்டன், போர்ட் டிபுடி கான்ஸர்வேடர் காப்டின் பேர்வேல், டிராபிக் மானேஜர் மிஸ்டர் ஆரம்ஸ்ட்ராங், ராணுவக் காரியதரிசி காப்டின் டோரி, போலீஸ் டிபுடி கமிஷனர் ராவ் பகதூர் பி. பராங்குசம் நாயுடு முதலானவர்கள். காத்திருந்தவர்களுடன் சொற்ப நேரம் கவர்னர் சம்பாஷித்துவிட்டு கவர்ன்மெண்டு ஹௌஸுக்குப் புறப்பட்டு விட்டார். கவர்னர் ஸ்டீமரை விட்டிறங்கியதும் கோட்டை மதிலிலிருந்து 17 மரியாதை வேட்டுகள் போடப்பட்டன. நேற்று மாலை 4-மணிக்கு மவுண்டுரோட் கவர்ன்மெண்ட் ஹௌஸிலிருந்து மகாகனம் பொருந்திய கவர்னர் புறப்பட்டுத் தம் மெய்க்காப்பாளரான பாடிகார்டுகள் முன்னிலும் பின்னிலும் வழிநடத்திச் செல்ல கோட்டை சீவ் செக்ரிடேரியேட் ஆபீஸ் முன்னிலையில் இறங்கியதும் 2-வது லீஸ்டர்ஷைர் ரெஜிமெண்டைச் சேர்ந்த ஸோல்ஜர்கள் பாண்டு வாத்திய முழங்க மரியாதை செய்தார்கள். வாயிற்படியில் ஆக்டிங் சீவ் செக்ரிடெரியும் மற்றைக்காரிய தரிசிகளும் எதிர்கொண்டழைத்து மெத்தைப் படிக்கட்டுகளுக்கு மேல் அழைத்துச் செல்ல அங்கு கௌன்ஸில் மெம்பர்களான ஸர் ஜான் ஆட்கின்ஸன், கனம் மிஸ்டர் பி. எஸ். சிவஸ்வாமி ஐயர், கனம் ஸர் ஹாரல்டு ஸ்டுவர்ட் ஆகிய இம்மூவரும் எதிர்கொண்டழைத்துப் புதிய கௌன்ஸில்-சேம்பருக்கு அழைத்துப் போயினர். அங்கு சென்று லார்டு பெண்ட்லாண்டு ஆஸனத்தில் கவர்னராய் அமர்ந்ததும் பாண்டு வாத்தியம் முழங்கியது. சீவ் செக்ரிடெரியார், இந்தியா மந்திரியால் அனுப்பப்பட்ட ப்ராக்ளமேஷனையும் நியமன பத்திரத்தையும் படித்ததும் 17 மரியாதை வேட்டுகள் போடப்பட்டன. விஜயம் செய்திருந்தோருடன் சொற்ப நேரம் பேசிவிட்டுக் கவர்னரவர்கள் திரும்பக் கவர்ன்மெண்டு ஹௌஸுக்குப் புறப்பட்டார். வழியில் ஆயிரக்கணக்கான மகா ஜனங்கள் கவர்னரைப் பார்ப்பதற்காக இருபுறத்திலும் காத்திருந்தார்கள். கவர்ன்மெண்டு ஹௌஸ் வாசாவதியின் வட புறத்திலும் தென் புறத்திலும் பொப்பிலி மகாராஜாவினாலும் வெங்கடகிரி மகாராஜாவினாலும் இரண்டு நல்வரவு வீளைவுகள் போடப்பட்டிருந்தன. அன்று சாயங்காலம் பாங்க்

வெடிங் ஹாலில் கவர்னருக்கும் லேடி பெண்ட்லாண்டுக்கும் பொதுஜன உபசாரணை நடந்தது. 27 வருஷங்களாக உருக்குழைத்து உதாரியான விசேஷபாத்தியதையால் இவ்விராஜதானி மகாஜனங்களின் உள்ளக்கருத்தை யோர்ந்துணர்ந்து 'சென்னைமாதேவி தன் தலைவனைக்கண்டுரையாடற் கண்ணியை' கனம்பொருந்திய நம் கவர்னரவர்களுக்கும் அவர் தேவியாருக்கும் நல்வரவு கூவியழைக்கும் நல்லுரையாக மேலே பிரசுரித்திருக்கிறோம்.

இப்போதுள்ள பிரதான மந்திரியாருக்கு முன்னிருந்தவரான ஸர் ஹென்றி காம்பெல் பானர்மான் ஆசரித்துவந்த லிபரல் கொள்கையை அனுசரித்து வருபவராவர் லார்டு பெண்ட்லாண்டு. இவருக்குச் சென்னைக் கவர்னர் உத்தியோகம் கொடுபட்டதும் ரிவ்யூ ஆவ் ரிவ்யூஸ் பத்திரிகையின் ஆசிரியரான காலஞ்சென்ற மிஸ்டர் W. T. ஸ்டெட் அவர்கள் லார்டு பெண்ட்லாண்டு லார்டு அபர்டீனுக்கு மருமகனென்றும், இவர் மிகுந்த புத்திக்கூர்மையும் காரிய நிர்வாகத் திறமையும் வாய்ந்தவரென்றும், எக்காலும் இவரது ஞாபகம் இந்தியாவிலிருக்கும்படியாய் இவரது ஆட்சி பிரகாசிக்குமென்றும் எழுதியிருந்தார். இதையெல்லாம கவனித்துப் பார்க்கும்போது இவ்விராஜதானி மகாஜனங்கள் லார்டு பெண்ட்லாண்டின் ஆட்சியில் இந்தியா முன்னுக்கு வருவதற்கு வேண்டிய ஸர்வ சாதனங்களும் பெறுவாரென்று நாம் நம்பியிருக்கலாம். கார்மைகேல் பிரபு இம்மாகாணக் கவர்னராய் வந்திருந்த கொஞ்சகாலத்துள்ளே என்ன நல்ல பெயரெடுத்தாரென்பது நம்மவர் அறிந்த விஷயம். ஜனசமூகத்தைச் சேர்ந்த எந்த விஷயத்திலும் முதன்முதல் ஜனங்களுடைய அபிப்பிராயத்தையே ஒட்டிப்போவது கார்மிகேலின் பிரதான கொள்கையாயிருந்ததென்பதை யெவரும் மறுக்க மாட்டார்கள். இப்போது வங்காளத்திலும் அவ்வபிப்பிராயமே பிரபலித்து நிற்கின்றது. லார்டு காமிகேலைப் போலவே தங்களுக்கு ஒரு கவர்னர் வேண்டுமென்று இவ்விராஜதானி ஜனங்கள் முன்னர் வங்காளத்திற்கு மாற்றப்பட்ட காலத்தில், இந்தியா மந்திரியாருக்கு விண்ணப்பமெழுதிக் கொண்டதற்கிணங்கவே, லார்டு பெண்ட்லண்டவர்களை இவ்விராஜதானிக் கவர்னராய் நியமனஞ்செய்தார்கள். இவருக்குப் பொதுஜனஸமூக அனுபவத்திலும் நிருவாக சக்தியிலும் பழக்கமுண்டு. கருணை, ஜீவகாருண்யம், நடுவுநிலைமை தவறாதிருத்தல், ராஜதந்த்ரசீலத்துவம் முதலான குணவிசேஷங்கள் இன்னவரிடமுண்டு. ஜனஸமூகக்ஷேமத்தில் மிகவும் பற்றுள்ளவர். இதற்கறிகுறியாக ஸ்காட்லாண்டு நிலமசோதாவைக் குறித்து 1907-ம் வருஷத்தில் பார்லிமெண்டு சபையைச் சேர்ந்த ஹௌஸ் ஆவ் காமன்ஸில் இவர் பிரேரேபித்ததே போதுமான அத்தாக்ஷியாகின்றது. மதிராசு யூனிவர்ஸிடி சான்ஸலராக இத்தென்னிந்தியா சர்வகலாசபைக்கு இவரால் வேண்டிய நன்மைகளேற்படுமென்பது திண்ணம். இதன்றியும் 1895-ம் வருஷத்தில் ஸர் ஹென்றி பௌலர் இந்தியா மந்திரியாயிருந்தார். அக்காலத்தில் இந்தியாவிலிருந்து அனுப்பப்படும் பருத்திக்கு இறக்குமதி வரி விதிக்கவேண்டியதைக் குறித்து ஹௌஸ் ஆவ் காமன்சு ஸபையில் பெருத்த பிரஸ்தாபம் வர ஸர் ஹென்றி ஜேம்சு என்பவர் இவ்வரி கூடவே கூடாதென்று மறுத்தார். அதன் பேரில் இந்தியா மந்திரி வெகு திறமையாயும் தீர்க்கமாயும் பேசியதுடன் லார்டு பெண்ட்லாண்டும் (அப்போது இவருக்குக் காப்டின் சிங்க்ளேர் என்று பெயர்) முன்னின்று பேசி இத்தீர்வையை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டுமென்று வாதாடினர். அப்போதே நம் ஸ்வதேச சிம்ஹமான தாதாபாய் நௌரோஜியும் பின்ஸ்பரிக்கு மெம்பராய் அந்த சபையிலிருந்தார். அவரும் ஸர் ஹென்றி ஜேம்சு கொண்டுவந்த பிரேரேபணையை எதிர்த்தே பேசினர். மொத்தத்தில் லார்டு பெண்ட்லாண்டுக்கு நிருவாககாரியங்களில் அப்போதிருந்தே நல்ல அனுபவமானதனாலே இச்சென்னை ராஜதானி நிருவாகத்திலும் அவரது பெயர் சிறப்புற்று விளங்குமென்றே நம்புகிறோம்.

———:-:———

## Welcome After Adieu.

—:o:—

I

"Hail! Spirit! Source to me of all life's joys!"
Arise! the darkest hour of Night is fled
The earliest hour of Dawn is come and with it
The Light of Public Life: Awake, Arise and throw off thy [sleep!

II

Darkness and Dawn was once the burden of my song
"The darkest hour has its Dawn!" was then my only hope!
Awake! Arise! Lo! the Sun has neared the Eastern bound!
Darkness departs and Dawn broadens out, into boundless Day!

Thus did "Cinderella" greet "Her Prince" on the eve of his departure from the Banqueting Hall on the 29th of March 1912, and she greets Her incoming Lover with the same true voice and spirit. The lines were "dedicated in true faith and loyalty with All Hope to H. I. M. the King Emperor through His Majesty's Viceroy in India" and to-day I give to the public the Message of the Spirit in response to this loving and loyal dedication by a *Resurrected Citizen.* "*Quil soit comme ilest desire.*"

"*Let it be as desired*" the Voice of Truth in *Asareeri* accents declare! "*Tathastu!*"

THE OVER-SEAS MESSAGE TO "CINDERELLA!"

"I hope your troubles are now over. It is grievous to think that those who may not like you should be in a position to harass you and interfere with the efforts which have so long been making for the good of your fellow-countrymen. I was about to add that it was also grievious to think that your own peace of mind was disturbed by your recent experiences; but you have assured me that you can look back on these events with calmness." Such indeed is the spirit in which the "Cinderella of the Empire" has put up with her woes unnumbered and the Voice of the Spirit stretching across and above the surging waves of the *Kalapani* (the dark waters) for thousands of miles in resonant accents resounding speaketh giving the long-suffering soul this assurance of her future fraught with Hope, Faith and Love, which will manifest themselves as Peace and Goodwill among men:—"By the time you get this (Message of the Spirit.) Lord Pentland will be among you. I hope you will like him as Governor and will find that he sympathises with your ideals and aims."

"Lady Pentland is, I am told, a charming Lady"—(and lest Cinderella with the suspicion born of suffering, mistake this for the interested promptings of some friendly voice of their Excellencies, the voice of the Spirit resounding adds in an unmistakable tone)—"I do not know either of them personally." It is the impersonally †personal witness of their worth which speaks with trumpet voice resounding and the Welkin re-echoes the Voice of the Spirit saying "*Amen*"!

This message then to "Cinderella" I present on bended knees before the Altar of Public Opinion—a weeping child whose tears are hardly dry from uttering "the Orphan's Cry" of Humanity at the shrine of *Dharmambika*—the Guardian Spirit of the Eternal Law which stands watch and ward over the lonely heart of the Oppressed Orphan equally with the throbbing heart of Kingdoms and Empires. "The Kingdom of the World is become the Kingdom of God and His Son."—Amen! *I am Kumarasambara—"Cinderella's lone-become Child." Aum.*

—*The Madras Dailies.*

—:o:—

† Here as I am finishing this line I am presented with an excellent likeness of Their Excellencies Lord and Lady Pentland by Lafayatte, a sure confirmation of my faith in what I write.